# கம்பன்
# சொல்லும் – பொருளும்

[பால காண்டம்]



பணிவன்புடன்
ப.சி.சிதாபதி
14.8.82

பி. சி. சிதாபதி – 'குறளடிமை'



அபிராம் பப்ளிகேஷன்ஸ்
307, லிங்கி செட்டி தெரு,
சென்னை-600001.

முதற் பதிப்பு : ஆகஸ்டு 1982


14 - 8 - 82ல் சென்னை கம்பன் பெருவிழாவில்
வெளியிடப் பெற்றது.

விலை ரு. 7 - 00

அச்சிட்டோர்

வெற்றி அச்சகம்
11, வேங்கடசாமி தெரு,
சென்னை - 600 005.

# பொருளடக்கம்

## காணிக்கை !

அணிந்துரையி யும்முன் அமரரா னீரே!
துணிந்துபிறர் நாடகில்லேன் தூயோர் — பணிந்துபுகழ்
கம்பன் அடிப்பொடியீர்! காணிக்கை யாக்குகின்றேன்
உம்மருள் பெய்வீர் உவந்து!

தங்கள் அடிப்பொடியன்
பி. சி. சீதாபதி

# முன்னுரை

> "ஓசை பெற்று உயர்பாற்கடல் உற்று, ஒரு
> பூசை, முற்றவும் நக்குபு புக்கென,
> ஆசை பற்றி அறைய லுற்றேன்"

எனக் கம்பர் தம் இராம காதையில் அவையடக்கம் பாடுகின்றார். அக்குற்றமற்ற அரசு ஒச்சிய இராமனின் கதை பாற் கடலோ! தேவ பாடையின் அக்கதை செய்தவர் மூவர் ஆனவர் தம்முளும் முந்திய நாவினன் உரையின்படி வந்த பாக்கடல் பாற் கடலோ! யாம் அறியோம். ஆனால், கவிச் சக்கரவர்த்தி கம்பர் உலகினுக்கே ஈந்துள்ள தமிழ்க் காவியம் ஆகிய இராம காதை உண்மையில் ஒரு பாற் கடலே!

எப்படி உணர்ந்தேன்? பாற்கடலில் ஒரு துளி, திரு. கம்பன் அடிப்பொடி ஐயா அவர்களின் தாயன்புச் சூழலில் உண்பிக்கப்பட்டேன், சுமார் பத்து ஆண்டுகளின் முன்னம்! அதன் சுவையும், ஊட்டமும் என் சிந்தையைக் கிளறிக் கொண்டே இருந்தன. ஒரு துளியே இத்துணை ஆண்டுகட்கு ஊக்கமும், உணர்வும், ஞானமும், தெளிவும் தருமேயானால் இன்னமும் சற்று அதிகம் கிடைத்தால் எத்தகைய பேரின்பமாகுமென வியந்தேன்! விழைந்தேன்.

இன்னமும் ஊட்டப்பட வேண்டிய சிறுவன்தான், நான்! ஏனென்றால் இலக்கியமாகிய உணவை நெருங்கும் வகையறியேன்; அதனை அளவறிந்து எடுத்துக் கொள்ளும்

இலக்கணமாகிய அகப்பையைக் கண்டறியேன்; இலக்கியத்தை முறையோடு அனுபவிப்பார் தொடர்பு இலேன்; எங்கோ எப்படியோ அச்சுவை செவி வழி சென்றிட்டால் அதனைச் செறிக்கும் உணர்வு எனும் குடலும் இலேன்; அதனைச் சேகரித்துக் கொள்ளும் வலிமை என்னும் மனோ பக்குவமும் இலேன்.

இத்தகையோர்க்கு ஏற்பட்ட, ஏற்படுகின்ற, ஏற்படக் கூடிய நிலையைக் காட்டவே கம்பர், தம்மையே 'பூசை' என உருவகித்துக் காட்டிக் கொண்டுள்ளார் போலும்! என் போன்ருர் காணும்போழ்து கம்ப காவியம் மாபெருங் கடலே என்பதில் வியப்பில்லை.

மாபெருங் கடல் என்பது மட்டுமல்ல; அஃது உவர் நீர்க் கடல் அல்ல; பாற் கடலே ஆகும்! எந்தப் பகுதியைப் பருகினாலும் இனிப்புச் சுவை ஊட்டி, அறிவிற்கும் உரம் ஊட்டுகின்ற தென்ருல் இயற்கையாய் அன்னை ஈந்திடும் தாய்ப் பாலினும் சிறந்ததன்ருே!

எனவே, ஒவ்வொரு துளியாக நாமே முயன்று பருகலாமே—நக்கிப் பருகலாமே—என்றிருந்தேன். இந்த, என் பேராசையை மிகுவித்தவர் மிகுவித்தகர், மதுரை காமராஜர் பல்கலைக் கழகத் துணைவேந்தர், திரு வ. சுப. மாணிக்கம் அவர்கள்!

அவர், காரைக்குடி, கோவை ஆகிய இரு பெரு நகர்களிலும் கம்பர் விழாக்களில் சொற்பொழிவாற்றிய போழ்து கூறியதாவது:—

> ''கம்பரை முழுமையாய்ப் படித்திட ஒரு பிறவி போதாது, அப்படியிருக்க, இந்த இப்பிறவியில் பெரும் பகுதி போல பின்னர் கம்பராமாயணத்தை அகலமாய்ப் படித்தல் என்பது ஏலாது. ஒரு சிறு

பகுதியையே யானுலும் ஆழப் படிப்பது என்பது இயல்வது ஒன்று—பயன் விளைவிப்பது ஒன்று—ஆகும்! எனவே, அக்காவியத்தினின்றும் ஒவ்வொரு நாளும் ஒரே ஒரு பாடலையேனும் எடுத்துக் கொண்டு ஆழ அலசிப் பருகுதல் வேண்டும். இதனை ஒரு சிலராகினும் முயற்சிப்பார்களா?'' என்ற பொருள்பட அழுத்தம் திருத்தமாகத் தம் கருத்தினை வெளிப்படுத்தினுர்.

புலியைப் பார்த்து பூனை சூடு போட்டுக் கொண்டது ஒப்ப, சின்னஞ் சிறுவனுகிய நானும் அச்சிலருள் ஒருவனுய்,

'நாடகத்தால் அவரடியார் போல் நடித்து நான்இலக்கிய
வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும் விழைந்தேன்!

ஞானேபதேசம் ஆயிற்று! ஆனுல், செயல்பாட்டிற்கான வழியைப் புரிந்து கொள்ள வேண்டுமே! அதற்கு யார் துணை?

துணையாகப் பெறவில்லையானுலும் துளியொளி அவ்வப் போழ்து பெற்றேன், திருச்சி தேசியக் கல்லூரிப் பேராசிரியர் திரு இரா. இராதாகிருஷ்ணன் அவர்களின் சொற்பொழிவு களினின்றும்! ஆம்; அவர் சொற்பொழிவு ஒவ்வொன்றிலும் ஏதாவது ஒரு பாடலின் நயத்தை விளக்கமாகக் காட்டாமல் இரார்! அந்நயத்தை அவர் எவ்வாறு பற்றுகின்ருர் என்பதை யும் ஓரளவிற்குப் புரிந்து கொண்டேன்!

இந்த நிலையில் என்னை எதிர் நீச்சல் வழியில் வளப் படுத்திய—தம்மையே யறியாமல் எனக்கு உதவி செய்த—பெரியோர்கள் திரு எஸ். நல்லபெருமாள் அவர்களும், திரு அ. கு. ஆதித்தர் அவர்களும் ஆவர்! அவர்களின் நூல்கள் சிலவற்றைப் படிக்கும் பொழுது ஒரு சில பாடல்களுக்கு அவர்கள் தந்துள்ள விளக்கங்களை என் மூளை—அஃது இருப்ப தாக ஏதோ நம்பிக்கை! ஏற்கத் தடுமாறியது! அதன்

வினேவாக, அக்கருத்துகளுக்கு மாருக — முரணுக —சில கட்டுரைகளேக் கிறுக்கினேன்!

ஆம்; கம்பருக்குத் தான் 'கிறுக்கினேன்' என்று சொல்ல உரிமையோ?

> ''அறையும் ஆடரங்கும் மடப் பிள்ளைகள்
> தறையில் கீறிடின், தச்சரும் காய்வரோ?''

அப்பப்ப! என்னேப் போன்ற மடங்களேக் குறிப்பிட அல்லவா அப்படிப் பாடியுள்ளார்!

என் கிறுக்கல்களேயும் திரு எஸ். என். குப்புசாமி முதலியார் (தலேவர், கம்பன் கழகம், வேலூர் வ. ஆ. மாவட்டம்), திரு டி.ஏ. கிருஷ்ணமூர்த்தி (தென் பிராந்திய இரயில்வேயில் ஒய்வு பெற்றவர், சென்னே-5), திரு எஸ். ராம் மோகன் (தென் பிராந்திய இரயில்வேயின் உயர் நிலே கணக் காய அதிகாரி, சென்னே-3) போன்ற ஒரு சில தச்சர்கள் மெச்சினர்! என் ஊக்கம் வளர்ந்தது.

முறையின் நூல் உணர்ந்த திரு கம்பன் அடிப்பொடி ஐயா அவர்களும், சென்னே மேற்கு மாம்பலம் ஸ்ரீராம் சமாஜத்தாரும், புதுக்கோட்டை கம்பன் கழகத்தாரும் என் கட்டுரைகளேக் கண்டு முனியவில்லே! மாருக, தங்கள் ஆண்டு மலர்களில் ஒரு சில கட்டுரைகளே அச்சேற்றினர்; என் தன்னம்பிக்கையும் ஏறியது!

அவர்களின் ஆசியின் தன்மையை யானறியேன்! அவ் வாசிகளின் பயனுய் அச்சேறிய கட்டுரைகளோடு சில புதிய வற்றையும் சேர்த்து நூல் வடிவாக்கும் நப்பாசை தோன்றியது!

ஒரு சில கட்டுரைகளே எழுதத் தொடங்கியவன், முதலில் பால காண்டம் முடிக்கும் எண்ணம் கொண்டேன். அதன்

பயனே இருபது கட்டுரைகள் கொண்ட இந்நூல்! இவற்றுள் இருபதாவது (இராமர் பரசுராமன்) ஸ்ரீராம் சமாஜ் 1981-ம் ஆண்டு மலரில் அச்சேறியது. அச்சேறிய பிற கட்டுரைகள் அயோத்தியா காண்டத்தைச் சேர்ந்தவை யாதலால் அவற்றைத் தனியொரு நூலாக்கும் ஆவலால் இங்கு விடுத்தேன்.

பிற காண்டங்களின் என் கட்டுரைகள் நூல் வடிவு பெறுவது ஆன்றோர் ஆசியாலும் இந்நூலைப் படிப்போர் அளிக்கும் ஊக்கத்தாலும் தான்! எனவே, இந்நூல் கண்டோர் என் குறைகளை எடுத்துக் காட்டி என்னைத் திருத்தினுல் அவர்களுக்கு நான் பெரிதும் கடமைப் பட்டவன் ஆவேன்.

என், இலக்கியத் தொண்டின் முயற்சிகளுக்கெல்லாம் நேரடியாகவும் மானசீகமாகவும் துணை நிற்கும் என் ஞானத் தந்தையார் திரு, கம்பன் அடிப்பொடி ஐயா அவர்களின் திருவடிப்பொடி என் சென்னி சூடுகின்றேன்.

ஐயா அவர்களின் அணிந்துரையே இந்நூற்கும் எனக்கும் ஏற்றதாகும் என விழைந்து வேண்டினேன். அவர்களும் அருள் கூர்ந்துள்ளனர், அவர்க்கு என் நன்றி கலந்த வணக்கத்தை சமர்ப்பிக்கிறேன்.

என் கட்டுரைகள் வரி வடிவிலேயே அவ்வப் போழ்து படித்து ஊக்கம் கொடுத்த, முன்னம் குறிப்பிட்டுள்ள நண்பர்கள் மூவர்க்கும் என் உளமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

அச்சிற்கெனப் படிவங்கள் எடுத்துத் தந்துதவிய என் இல்லக்கிழத்தி, திரு சாரதாவிற்கும் என் தம்பியின் மகன் திரு. சந்திரசேகரனுக்கும் என் பாராட்டுக்கள் கலந்த நன்றி.

அனைத்திற்கும் மேலாக, ஆழ்ந்தகன்ற கல்வி ஞானத்தில், பக்தி வெள்ளத்தில் மூழ்கிய பெரியோர்களின் எழுத்துக்களையே அச்சேற்றும் பாங்குடைய — அம்பிகை அருள் கொண்ட — 'அபிராமி' பதிப்பகத்தார், இந்தப் பித்தனுகிய பேதை சொன்னவற்றையும் தமிழ்ப் பக்தன் சொன்னதாக ஏற்று நூல் பண்ணப் பெறுபவர் ஆயினரே! அவர்களுக்கு — அவருள்ளும் பல் வளம் பெருகும், பெருக்கும் திருவாளர் காடப்ப செட்டியார் அவர்களுக்கு —என் நன்றியை எப்படிக் காட்டுவேன்!

''வாழ்த்துவதும் தாம் வாழ்வான்'' என்பார்களோ! அப்படித் தான் இருக்கட்டுமே! ஆண்டவன் அருளாலும், ஆன்ரோர் ஆசியாலும், அன்பர் தம் நல்லுறவாலும், இச்சிறியேனுல் இன்னமும் தமிழ்த் தாய்க்கு மலர் மாலைகள் என்ற பெயரால் ஒரு சில நார்களையேனும் அணிவிக்க இயலுமாகில் எட்டாத உயரத்தில் இருக்கும் தமிழன்னையின் கழுத்தில் அவற்றை மாட்ட அபிராமி என்னைத் தூக்கி நிறுத்தட்டுமே! அதற்கும் இப்பொழுதே நன்றி சொல்கின்றேன்.

அன்னிய மொழிகளின் மோகத்திற்கே இன்னமும் இழுத்துச் செல்லப்படுகின்ற மாணவச் செல்வங்கள், நமது அன்னை மொழியின் இன்ப ஊற்றுக்களையும் காண வேண்டும்! அதனை அப்போதைக்கப்போது சுவைத்துப் பருக வேண்டும்; அவ்வாறு பருகுவதால் அவர்களிடம் தமிழ்ப் பண்பாடு, தமிழ்க் கலை, தமிழர் நாகரிகம் முதலியன பெருக வேண்டும் என்று மனமார நான் விழைபவன். அதற்கு, இந்நூல் ஓரளவிற்கேனும் நிச்சயம் கை கொடுக்கும் என முழு நம்பிக்கை கொண்டுள்ளேன்.

சொற் சுவைகளை இலக்கண முறையில் மட்டும் ஆய்ந்தால் படிப்பதற்கு அலுப்புத் தட்டக் கூடும்; ஆதலான், கதையம்சங்களையும் கலந்து படிப்பதற்கு ஆர்வம் கூட்ட

முயன்றுள்ளேன். எனவே, இந்நூலின் படிவம் மேல்நிலை, உயர்நிலைப் பள்ளிகளின் மேல் வகுப்பு மாணவர்கள் ஒவ்வொருவர் கைகளிலேயும், கல்லூரி மாணவர்கள் ஒவ்வொருவர் கைகளிலேயும் சென்றடைதல் வேண்டுமென அவாவுகின்றேன். அந்த அவாவினை நிறைவேற்றுவோர் அனைவர்க்கும் மட்டும் அல்ல, அதனை ஏற்றுப் படிக்கும் அனைத்து மாணவ, மாணுக்கியச் செல்வங்கட்கும் என் நன்றியும் நல்லாசியும் முறையே உரித்தாக்குகின்றேன்.

> "எப்பொருள் எத் தன்மைத் தாயினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்ற நோக்கில் எழுதப் பெற்றுள்ள இந்நூற் கட்டுரைகளை,

> "எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்ற அளவுகோல் கொண்டு அனைவரும் படித்திடுக.

இந்நூலைப் படித்து, தம்தம் உயர்ந்த நோக்குகளை எடுத்துரைத்து என்னைத் திருத்தவும், ஊக்குவிக்கவும் இருக்கும் அன்பர்கள் அனைவர்க்கும் முன் கூட்டி இப்பொழுதே நன்றி நவில்கின்றேன்.

வணக்கம்.

அன்புள்ள

பி. சி. சீதாபதி

# ஆசிரியர்க்கு அறிஞர் தம் ஆசியுரைகள்

**கம்பன் கழகம், காரைக்குடி**

உங்கள் உரை யாய்வுக் கடிதம்! என்னத்தைச் சொல்வேன்! தெள்ளக் கேட்டு, தெளிய ஆய்ந்து, சிறக்க வெளிப்படுத்தி யுள்ளீர்கள். செவ்வியறிந்து சிந்தை மகிழ வாழ்த்துகிறேன். வணக்கம் புரிகிறேன். வாழ்க நும் திறனாய்வு! வளர்க தமிழ்ப் பணி !

**19 - 4 - 69** **சா. கணேசன்**

'கம்பன் திருநாள் நிகழ்ச்சிகளின் திறனாய்வு' பெற்றேன், இன்றே! நன்றி; உங்களின் ஆர்வத்தை யும், ஒளிவு மறைவில்லாத கருத்தையும் மனமாரப் பாராட்டுகிறேன்.

இத்தகைய மதிப்புரையை மனமாரமதித்து ஏற்றுக் கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய மனத் தெம்பையும் மதி நுட்பத்தையும், கரவிலா உள்ளத் தையும் பெற்றுள்ள உங்களை வாயார வாழ்த்து கிறேன். வணங்குகின்றேன்.

**23 - 2 - 72** **சா. கணேசன்**

உங்கள் கருத்துரை வந்தது உரிய காலத்தே! முற்றும் நின்று, சிந்தித்துப் படித்தேன். பேரளவு உடன் படுகிறேன். உங்கள் ஆர்வத்தையும் கரவிலா நெஞ்சத்தையும் முழுக்கப் பாராட்டு கிறேன்; வணங்குகிறேன்.

24 - 1 - 73 கம்பன் அடிப்பொடி

உங்கள் 'அருமையான நோக்குரை'க்கு எப்படிப் பாராட்டை — நன்றியைப் புலப்படுத்துவேன்? எல்லாம் மிக நுணுக்கமாக நோக்கிக் குறையும் நிறையும் திறமையாகப் புலப்படுத்த பெற்றுள்ளன. இவற்றை எல்லாம் எவ்வளவு மதித்துப் போற்றி மகிழ்கிறேன்—பயனடைகிறேன் என்பதை எப்படிக் காட்ட வல்லேன்! காமராகக் கண்ணோடும், நக்கீர நோக்கோடும் அணுகி, ஆய்ந்து, கண்ட முடிவைக் கரவாது காட்டும் வெற்றியை வாழ்த்தி வணங்கி ஏற்கிறேன். வாழ்க உங்கள் அன்பு!

26 - 1 - 75 கம்பன் அடிப்பொடி

தாங்கள் தந்த 'கம்பனில் வள்ளுவம்' நோக்கி மகிழ்ந்து உடனேயே என் பாராட்டைத் தெரிவித்தேன். முயற்சி நன்று. பா தரமாக இருக்கிறது. பா வழிக் கம்பன் — வள்ளுவன் ஒப்பு நோக்கைத் தற்கால ஜெட்வேக மக்கள் ரசிக்க மாட்டுவரா என்பதே எளியேன் ஐயம்.

உங்கள் திறமையையும், உள்ளத்தையும் நன்கறிவேன். புலனைப் பற்றிக் கவலாது பணிபுரிய

முயல்வதே நோக்கமாக உடைய உங்கள் நன்முயற்சி கட்கு என்றுமே என் பாராட்டும் வாழ்த்தும். இறை வன் ஆசியு முண்டு.

25 - 2 - 76 கம்பன் அடிப்பொடி.

உங்கள் 1976 ஆம் ஆண்டுக் கம்பன் திருநாள் நிகழ்ச்சிகளின் மதிப்பீட்டுரை கிடைக்கப் பெற் றேன். நன்றி.

பலவற்றை அப்படியே ஒப்புக் கொள்ளு கிறேன். சிலவற்றை உடன்படக் கூடவில்லை. என்றாலும் உங்கள் நேரிய மதிப்பீட்டை மதிக் கிறேன்.

இங்ஙனம் மிக்க ஈடுபாட்டுடன்—பரிவுடன் திறனாய்வு செய்து பகரிக்கும் சேவையைப் பெரிதும் மதித்து வரவேற்று நன்றி கூறுகிறேன்.

17 - 11 - 76 கம்பன் அடிப்பொடி.

சோர்கின்ற சூர்ப்பணகையின் முறையீட்டைக் கண்டேன்; கேட்டேன். எதிர் நீச்சல் போடும் முறை நன்றாக இருக்கிறது. சூர்பணகையின் முறையீட்டில் நியாயம் இல்லாமலில்லே.

'சூர்ப்பணகை சோர்கின்றாள்' என்ற கட்டுரை நிலைமையை சுவாரஸ்யமாக எடுத்து மாற்றிக் காட்டிக் கற்போருக்குச் சூர்ப்பணகையின்பால் ஓரளவு பரிவையும் இரக்கத்தையும் உண்டாக்கக் கூடியதாக அமைந்திருக்கிறது.

இத்தகைய கட்டுரைகளும் இலக்கியப் பிரியர் கட்கு இன்பம் தருவனவே !

என் மனமார்ந்த பாராட்டுக்கள் !

7 - 4 - 77 கம்பன் அடிப்பொடி.

உங்களாண்டான் 'திலைத்துணை (ஆம்) நன்றி செயினும், பனைத்துணையாக் கொள்வர் பயன் தெரிவார்' (நன்றி — நன்மை) என்ற அறவுரையை மெய்ப்பிக்கின்றீர்கள் போலும்! வாழ்க வள்ளுவன்; வாழ்க அவனடிமை!

15 - 4 - 77 கம்பன் அடிப்பொடி

(கம்பனில் கணபதித்துவம்) கட்டுரை முழுதும் பார்த்தேன். திறமை வெளிப்படுகிறது. மொத்தத்தில் கட்டுரை வாதத்திறமை மிக்கதாக உள்ளது. இப்படிப் பல கோணத்தில் நின்றும் ஆயலாம் கம்பனை என்று நிலைநாட்டும் உங்கள் ஆர்வத்தைப் பாராட்டுகிறேன். வாழ்க உங்கள் தமிழ்ப் பற்று; வளர்க உங்கள் முயற்சி என்று பாராட்டுகிறேன்.

13 - 7 - 77 கம்பன் அடிப்பொடி

உங்கள் கம்பன் திருநாள் 1978 மதிப்பீடு கிடைக்கப் பெற்றேன். பெரும்பாலும் உங்கள் கணிப்பை மதிக்கிறேன். சிலவற்றில் மாறுபட்டாலும் உங்கள் ஈடுபாட்டைப் போற்றுகிறேன்.

கம்பன் மாட்டும், தமிழ் மொழியின் பாலும் என் மீதும் உள்ள உங்கள் அன்பை மிகவும் போற்றிப் பாராட்டி நன்றி கூறுகிறேன்.

5 - 5 - 79 கம்பன் அடிப்பொடி

## அருள்திரு பாலமுருகன் திருக்கோயில்
## இரத்தினகிரி—வ. ஆ. மாவட்டம்

அருளாசி. கடிதம் கண்டு மகிழ்வு.

இதனுடன் அவ் வாசகத்தினை அனுப்பி உள்ளேன். தமிழாக்கத்தில் சுட்டிக் காட்டிய குறைபாட்டினைத் திருத்தி, எழுதி யனுப்பவும். அதனை மாற்றி எழுதிட ஆவன செய்கிறேன். உரியவர்கள் உரிமையுடன் சுட்டிக் காட்டுவது பொருத்த முடையதே !

பால முருகனடிமை

அருளாசி. தங்கள் கடிதம் கண்டு மகிழ்வு.

தங்களுடைய கருத்துரையினை ஆய்வு நோக்கிலேயே விளக்கிடக் கோருகிறேன். தயக்கத்திற்கே இடமில்லை. பலரின் கருத்துக்களை (புரசை முருகேச முதலியார் அவர்களின் 'வாலி வழக்கு' எனும் நூல் பற்றி) சேர்க்க வேண்டுமென்ற நோக்கத்தில் இதில் ஈடுபடலாயினேன்.

நலன்கள் யாவும் பெற்றிட வாழ்த்தும்.

21 - 11 - 77

பால முருகனடிமை

அருளாசி.

சென்ற ஓராண்டு காலத்தில் பிரதிமாதம் நடைபெற்ற சமயச் சொற்பொழிவில் தாங்கள் பங்கு கொண்டு சொற்பொழிவாற்றியமைக்கு மகிழ்வுறுகிறோம்.

அதனையொட்டி. தவத்திரு குன்றக்குடி அடிக ளார் அவர்கள் மூலம் தங்களுக்குப் பொன்னுடை போர்த்திப் பாராட்ட மகிழ்ச்சியோடு முடிவெடுத் திருக்கிறோம்.

இரத்தினகிரிக்கு வந்து தவறாமல் கலந்து கொண்டு விழாவைச் சிறப்பிக்கக் கோருகிறோம்.

2 - 2 - 79 பால முருகனடிமை

கலைமகள் காரியாலயம், சென்னை

கோபிக் கவியரங்கில் தாங்கள் பாடிய கவிதை யைக் கண்டேன்; படித்தேன்; இன்புற்றேன். அன்று கேட்டதைவிட இன்று படித்துப் பார்த்ததில் அதன் சுவையைக் காண முடிந்தது.

21 - 1 - 78 கி. வா. ஜகந்நாதன்

மகாகவி அ. கு. ஆதித்தனர், சென்னை

மேதா விலாசம் மிக நன்று ! மிக நன்று !

சிதா பதியார்க்குச் செப்புகிறேன் பல்லாண்டு.

19 - 10 - 77 அ. கு. ஆதித்தர்

## இறைபணி மன்றம் திருவண்ணமலை

தங்கள் கட்டுரையை 3 முறை படித்தேன். எனது நண்பர்களுக்கும் படித்துக் காண்பித்தேன். அனைவரும் ஒரு மனதாகப் பாராட்டினர்கள். ஏற்கனவே தங்கள் கட்டுரைகளைப் படித்துள்ளேன். தங்கள் இலக்கியத் திறனய்வு மிகவும் பாராட்டப் பட வேண்டிய ஒன்ருகும்.

அவ்வப்போது வெளியான தங்கள் கட்டுரைகள் அனைத்தையும் ஒன்று திரட்டி ஒரு புத்தகமாக ஏதாவது ஒரு கம்பர் விழாவில் வெளியிட்டால் மிகவும் பலனுள்ளதாக இருக்கும் என்பதுடன் தங்கள் புலமையையும் தமிழகம் நன்கு அறிந்து போற்றும்.

நான் யாரையும் அகாரணமாகப் பாராட்ட மாட்டேன். பாராட்டி ஆக வேண்டியதும் ஒன்றும் இல்லை. ஆனல், தங்கள் இலக்கிய புலமையை அதன் தகுதி யறிந்து பாராட்டுகின்றேன். இது எனது கடமையும் கூட.

இலக்கிய உலகில் தங்களுக்கு ஒரு ஒளிமயமான எதிர்காலம் உள்ளது என்பதை உறுதியுடன் என்னல் கூறமுடியும்; தங்கள் இலக்கியப் பணி மேன்மேலும் வளர எல்லாம் வல்ல இறைவன் அருள் பாலிப் பானக!

26 - 4 - 79

சு. சண்முகம்
(செயலாளர் — பொருளாளர்)

### கம்பன் கழகம், வேலூர் வ. ஆ. மாவட்டம்

'கம்பனில் கணபதித்துவம்' என்ற கட்டுரையின் துவக்கத்தில் கணபதித்துவத்தைச் சுருக்கமாகவும், தெளிவாகவும் சுட்டிக் காட்டியிருப்பது தங்களது ஆழ்ந்த ஞானத்தை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

அனுமனைப் பற்றிப் பேசிடுவோரும் எழுதிடுவோரும்கூட, இந்தக் கூற்றினைத் தங்கள் உரையில் இனி சேர்த்துக் கொள்ளக் கூடிய வகையில் அனுமன் பாத்திரப் படைப்பின் தத்துவ விளக்கமும் பின்னணியில் அமைந்து இருத்தலைக் கட்டுரை வெளிப்படுத்துகிறது.

மறைமலையடிகள் வசன நடையினின்றும் சற்று இறங்கி, திரு. வி. க. வசன நடைக்குத் தாங்கள் மனமிரங்கி வந்தால் இன்னும் அனேகர் கேட்ட அளவிலேயே புரிந்து கொண்டு அனுபவித்திட முடியும்.

3 - 11 - 77 ந. குப்புசாமி முதலியார் (தலைவர்)

தங்களின் இரண்டு ஆய்வுக் கட்டுரைகள் — திறன் — சுமித்திரையை வணங்கினான் என்பதைச் சொல்லாமல் குறிப்பில் உணர்த்திய செய்கைகள் நடந்தேறிய விதத்தின் மூலம் கம்பன் உணர்த்தியிருக்கிறான் என விளக்கிய (ஓர் உம்மை ஈருணர்வு என்ற தலைப்பிலான கட்டுரை) நுட்பம் மிகவும் பாராட்டத் தக்கதாய் இருந்தது. அதே போல, குகன் வார்த்தைகள் கேட்டு இராமன் சீதை இலக்குவன் இருவர் முகமும் பார்த்த நோக்கின்

தன்மையைப் புதிய கோணத்தில் முற்றிலும் மெச்சத் தக்க, சிந்திக்கத்தக்க, ஒப்புக் கொள்ளத்தக்க விதத்தில் பொருள் கண்டிருப்பது (பார்வை என்ன பார்வையோ! என்ற தலைப்பிலான கட்டுரை) மிகச் சிறப்பாக இருந்தது.

'கம்பன் கண்ட கடவுள்' பற்றி எல்லா பகுதிகளிலும் பாடல்களும் இடம் பெறச் செய்து இன்னமும் சற்று விரிவு படுத்தி ஒரு Thesis ஆகவே படித்து விடலாம் என நினைக்கிறேன். இதுவரை எவரும் தொடாத முயற்சி ஒரு நூலாகவே வரக் கூடிய தகுதியும் பொருளும் பொதிந்து இருக்கின்றன.

8 - 11 - 77 ந. குப்புசாமி முதலியார்
(தலைவர்)

திரு. டி. எ. கிருஷ்ணமூர்த்தி அவர்கள்
ஓய்வு பெற்ற இரயில்வே அலுவலர், சென்னை

ஓர் உம்மை ஈர் உணர்வு

An exceedingly senstive appraisal of kamban's intension.

However 'PCS's imaginative faculty of seeing an 'இழிவுச் சிறப்பு' in Bharatan's 'இழிவுணர்ச்சி' is superb and thought provoking.

"இராமன் - பரசுராமன்"

A cut size gem of literary brilliance.

"மாவடவைக் கனல் மண்டியதேன்"

A cogent analysis and comparatively precise too good article.

14 - 12 - 79 T. A. Krishnamurthi

## கம்பன் கழகம், திருவாரூர்

காரைக்குடி கம்பன் மலரில் தாங்கள் எழுதியுள்ள 'மண்டோதரி மறுடுகின்றாள்! என்ற அற்புதமான கட்டுரையைப் படித்து மிகவும் மகிழ்ந்தேன். தெளிவான ஆராய்ச்சி! புதுமையான அணுகுமுறை! நல்ல கருத்தோட்டம்! இனிய நடை! திருக்குறள் மேற்கோள்கள்! இவையெல்லாம் தங்கள் நுண்மாண் நுழை புலத்தை எதிரொலிக்கின்றன.

படித்து அயர்ந்து போனேன், இப்படியெல்லாம் சிந்தித்து எழுத தங்களுக்கு நேரம் ஏது என்று இப்போது நான் புரிந்து கொண்டேன் — தாங்கள் வாசிப்பது மட்டும் தமிழை அல்ல, சுவாசிப்பதே தமிழை என்று!

தங்கள் தூயபணி தொடரட்டும்!

தங்கள் நெஞ்சில் இலக்கிய மலர்கள் மலரட்டும்!

28— 3—81 கலைமாமணி—மா. வரதராஜன்

திரு. சிதாபதியின் மிகச் சுவையான மதிப்புரையில் சில பகுதிகளைப் படித்தேன். உயர்ந்த தமிழறிவு, தமிழ்க் காதல் இவற்றுடன் நல்ல அறிவுத் தெளிவும் அமையப் பெற்றவர். அன்பு மிகுந்தவர். அவருடைய மதிப்புரைக்காக உளமார்ந்த நன்றியை அவருக்கும் தெரிவிக்க வேண்டுகிறேன். அவரைப் போல் ஆழ்ந்து படித்து மதிப்புரை எழுதுவோரைப் பார்க்க முடியாது. ஆனந்த விகடன், கல்கி முதலிய பத்திரிகைகளில் (அன்பு மிகுந்த மதம் எனும் நூல் பற்றி) மதிப்புரை வரைந்த அன்பர்கள் எல்லாம்

அரிமா நோக்கிலேயே நூலைப் படித்தவர்கள். சிதாபதியின் ஊக்கம் அவர்களிடம் காணக் கிடைக்காது.

—திரு. ஏ. வி. சுப்ரமணியம் அவர்கள் (தற்போதைய தென் பிராந்திய இரயில்வேயின் அடிஷனல் ஜெனரல் மானேஜர்) அன்பர் திரு. டி. ஏ. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு 11-6-76 திகதியன்று கல்கத்தாவினின்று எழுதிய கடிதத்தின் பகுதி.

## திரு. டி. கே. எஸ். சகோதரர்கள்

சென்னை வானொலி நிலயத்திற்குத் தாங்கள் அனுப்பியிருந்த நாடக விமர்சனத்தைப் படித்தேன். நாடகங்களைக் கேட்டதோடு அமையாமல் அவற்றிற்கு மதிப்புரையும் வரைந்து அனுப்பிய தங்கள் ரசனையை மனமாரப் போற்றுகின்றேன்.

தங்களுக்கு என் மனமார்ந்த நல் வாழ்த்துக்கள்.

11— 3—65 தி. க. ஷண்முகம்

# செறிந்த சோறு

கோசல நாடு வளம் மட்டும் மிக்கது அன்று. வளத்தான் வந்தவர்க்கு விருந்து ஊட்டி மகிழும் மனங்களின் வளமும் பெரிது!

"இருந்து ஓம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்து ஓம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு"

என்றார் திருவள்ளுவர்.

கம்பர் காட்டுவார் வேளாண்மை செய்யும் உழவர்கள் கோசல நாட்டில் திருவள்ளுவர் செப்பிய வேளாண்மையும் செய்து வந்தனர் என.

"முந்து முக்கனியின், நானா குதிரையின்,
முழுத்த நெய்யின்,
செந்தயிர்க் கண்டம் கண்டம் இடைஇடை
செறிந்த சோற்றின்
தம்தம்இல் இருந்து, தாமும், விருந்தொடும்,
தமரி னோடும்
அந்தணர் அமுத உண்டி அயில்வுறும்
அமலைத்து எங்கும்"

எனக் கம்பர் பாடும் பாடலைப் படிக்கும் பொழுதும், கேட்கும் பொழுதும் நாமும் அவர்களின் விருந்துகளில் கலந்து கொள்கின்ற ஒரு மனோநிலை தோன்றுகின்றது!

"அந்தணர் என்போர் அறவோர் — மற்றெவ் வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டு ஒழுகலான் என்ற இலக்கணத்தில்

'அந்தணர் அமுத உண்டி' என்பதனால் சைவ உணவே, விருந்துகளில் பயன்படுத்தப் பட்டன எனத் தெரிகின்றது. அவற்றில் மா, பலா, வாழை, ஆகிய முக்கனிகள் பரிமாறப் பட்டன; துவரை, அவரை, கடலை போன்ற பலவித பருப்புகள் கொண்டு பக்குவப் படுத்தப்பட்ட பதார்த்தங்கள் இடம் பெற்றன; நறுநெய் வழிந்தோடும் அளவிற்கு பெய்யப் பட்டது! பாலை நன்கு காய்ச்சியதால் செந்நிறமாய் மிளிர்ந்த தயிர், துண்டு துண்டாய்ப் பரிமாறப்பட்டது! அந்த அளவிற்குக் கெட்டியானது! இறுதியில், வெல்லக் கட்டியால் செய்த பதார்த்தம் [பாயசம் போன்றவை] பெய்யப் பட்டது! இவ்வளவும் இலையில் இட்டவர்கள் சோற்றினை வைக்க மறந்தனரோ?

அவர்கள் மறந்தாலும் கம்பர் மறப்பாரா! 'இடை இடை செறிந்த சோறு' இருப்பதாய்க் காட்டினார்! இக்காட்சியைப் புரிந்து கொண்டவர்களில் சில பெரியோர்கள் 'துண்டு துண்டாக வைக்கப்பட்ட செந்தயிரின் இடையிடையே சோறு செருகப் பட்டிருந்தது! அந்த அளவிற்குத் தயிர் கட்டியாக இருந்தது!' என வியப்புக் காட்டுவர்.

அத்தகையவர்கள், இந்நாளில் நகரங்களில், நாகரிக மெனக் கருதிக் கொண்டு, செல்லும் விருந்துகளில் கை பட்டும் படாமலும் சிறிது உண்ணும் வழக்கத்தினராய் இருப்பர்! அல்லது வயதின் முதிர்ந்து மற்ற வகைப் பதார்த்தங்களை அதிகம் உண்ணக் கூடாத — உண்ண முடியாத — நிலையில் தயிர்ச் சோறு மட்டும் சற்று உட்கொள்ளும் பாங்கினராய் இருப்பர்! அல்லது, இயற்கை யுணவு வழிப்பட்டவர்களாய் இருப்பர்!

நாம் கம்பரில் காண்பது உழவர் தம் விருந்து! அதிலும் உணவு விடுதிகளுக்கு, வந்த விருந்தினரை அழைத்துச்

சென்ரே, அயலார் வீட்டிற்கு அழைத்துச் சென்ரே உண்பிப்பவர்கள் அல்ல. 'தம்தம் இல் இருந்து' உண்பிப் போர்!

அதற்கெனவே
"எறிதரும் அரியின் அம்மை எடுத்து
வான் இட்ட போர்கள்
குறிகளும் போத்தின் கொள்வார்;
கொன்ற நெல் குவைகள் செய்வார்:
வறியவர்க்கு உதவி, மிக்க, விருந்து உண
மனையின் உய்ப்பார்"

எனக் கம்பர் படம் பிடித்துக் காட்டுவார்!

அவ்வுழவர்கள் 'தாமும்' உடன் அமர்ந்து உண்பர் எனப் பார்க்கின்ருேம். உழவர் தம் உழைப்பிற்கும், உடல் வலிமைக்கும் ஏற்ப நிரம்ப உண்ண வேண்டும் — உண்டனர். விருந்தில் பண்பாட்டோடு நடந்து கொள்ள வேண்டும் என்ருல், விருந்தளிப்பவர்கள் தம் இலையில் மட்டும் வேண்டுவ வேண்டிய அளவு பரிமாறச் செய்து கொள்ள மாட்டார்கள். மாருக முதலில் விருந்தாய் வந்தவர்களின் இலைகளில் குறையக் குறைய மீண்டும் மீண்டும் பரிமாறச் செய்வர்; பின் தமக்கும் ஏற்பர்

இதனுற்ருன், 'தனக்கு வேண்டின் அடுத்த இலைக்குப் பரிமாறச் சொல்வர்!' என்ற நையாண்டித் தனமான பழமொழியைப் பலர் நம் விருந்துகளிலே கையாளக் காண்கின்ருேம்!

இவ்வாறு, விருந்தளிப்போர் விருந்தாடிகளுக்குப் பரிமாறுவோரிடத்தில் அடிக்கடி சொல்லி அழைப்பதால் அங்கே ஆரவாரம் உண்டாகின்றது! இன்றேல் அங்கு 'அமலைத்து' எனக் கம்பர் சொல் பெய்திட வாய்ப் இல்லையே! இந்த அளவிற்குப் பரிமாறல் நடக்கும் பொழுது

சோற்றினைத் தயிரின் இடையிடை செறுகிய சோறு என்றல் எவ்வாறு பொருந்தும்?

'நானுவித பருப்புப் பண்டங்களுக்கு என்றும் தயிர்க்கு என்றும், இடையிடையே சோறு இட்டனர்; அதுவும், அதிகமான [செறிந்த] சோறு இட்டனர் எனக் கொள்ளும் வகையில் தான் கம்பர் விருந்தளித்துள்ளார்!

'கண்டம் கண்டம்' என அடுத்தடுத்து சொற் பெய் துள்ளதை வைத்துத் தயிர் துண்டுகளின் இடையில் செறுகிய சோறு என்று கொண்டால், தமிழர் தம் விருந்து உணவு முறைப்படி வெல்லத்தினுல் ஆய பதார்த்தம் [பாயசம்] பறி மாறப்படவில்லை என்ற வழி ஏற்படும். இதற்குப் பல் சுவை விருந்து நமக்குப் பரிமாறும் கம்ப நாட்டாழ்வார் விடுவாரா!

வாருங்கள் உண்போம் இன்னமும் வளமார் சுவைப் பண்டங்களை அடுத்தடுத்த இலைப் பரிமாறல்களில்!

# கொலை தொழில் அரக்கர்

தேவர்கள் அரக்கரால் அவதிப்பட்டனர். தங்களைக் காக்க வேண்டுமென்று முறையிட்டனர். இந்திரன், பிரம்மன், சிவன் ஆய அனைவருமே அரக்கரோடு போரிட்டு அவர்களைத் தொலைத்தல் தம்மால் ஆகாது என்றிட்டனர். அவர்கள் உட்பட தேவர்கள் அரிதுயில் வளரும் திருமாலிடம் சென்று முறையிட்டு வேண்டி நின்றனர்.

"கொலை தொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பென்" என்று திருமால் அருளினர். யார் யார் எப்படி எப்படி உரு வெடுத்து உலகில் பகவானின் அவதாரத்தில் தொண்டு புரிவது என்றெல்லாம் முடிவெடுத்தனர். பகவான் தயரதன் புதல்வனாக அவதரிப்பதாகச் சொன்னர்.

இராமன் தோன்றினன். தன்னுடைய அவதார நோக்கத்தைத் தான் மொழிந்த வண்ணம் அவன் மறவாது நின்றான்! அதாவது, அரக்கர்களை அழிப்பது அல்ல— 'கொலைகள் புரிந்து வெறியாட்டத்தில் தம் நிலைமறந்த, அரக்கர்களுடைய கொடுமையைத் தீர்ப்பது' என்பதுதான் அவன் வாக்கு! அஃது அனைத்து அரக்கர்களையும் கொன்று வீழ்த்தாமலேயே கூட ஏலும் அல்லவா?

விசுவாமித்திர முனிவரின் வேள்வி காக்கச் சென்றான் இராமன். யாகத்தைக் கலைக்கும் தாடகை வழியில் எதிர்ப் பட்டாள்.

கோரமான பார்வை கொண்டாள்; ஆர்த்தாள் அரற்றினள்; இராமனுக்கும் சினம் மூட்டினள். என் காவல்

எல்லேக்குள் வந்தவர் யார்? எலக்கு இனி உணவிற்கு வழியில்லேயே என்று நீங்களாக, நான் உன்ண வந்தீர்களா! இல்லே உங்கள் விதி என்பால் உங்களேத் தள்ளியதா!' என்றெல்லாம் விளுவிக் குதித்தாள்.

இராமன் அவளே அடக்க எண்ணிஞன். ஆனல், 'ஆவி உண்! எலக் கணேயைவிட மனமின்றி நின்ருன்! ஏன்?' அவள் பெண் என்பதால்' என்பார் கவிச் சக்கரவர்த்தி.

அது மட்டும் காரணம் அல்ல! ''அவள் கொலேகாரியா? வீண் பேச்சுதானே பேசி நிற்கின்ருள்! 'அவளேக் கொல்வானேன்? நமது நோக்கம் கொலேயைத் தம் வழக்க மாகக் கொண்டுள்ள அரக்கர்களே திருத்துவதுதானே' திருந்தவில்லேயென்ருல் தானே அழிக்கவேண்டும்?'' என் றெல்லாம் அவன் உள்ளம் உரைத்தது.

இது, எவ்வாறு நமக்குத் தெரிகின்றது? இராமனின் செய்கையை மட்டும் காணுது, அவனுடைய 'சிந்தைக் கருத்து எலாம்' அறிந்த நான்மறை அந்தணன் விசுவாமித்திரன் இராமனின் சிந்தையை மாற்றக் கைகொள்ளும் உத்திகளால் தெளிவாகின்றது!

''தீது என்றுள்ளவை யாவையும் செய்து, எமைக்கோது என்று உண்டிவள்; இத்தனேயே குறை;''

''மறம் கொடு, இத்தரை மன்னுயிர் மாய்த்து நின்று, அறம் கெடுத்தவட்டு ஆண்மையும் வேண்டுமோ?''

''சாற்றும் நாள் அற்றது எண்ணி, தருமம் பார்த்து, ஏற்றும் வின் என்பது அன்றி, இவளேப் போல, நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பது ஓர் கூற்றும் உண்டு கொல்?— கூற்று உறழ் வேலிஞய்!''

''மன்னும் பல் உயிர் வாரி தன் வாய்ப் பெய்து தின்னும் புன்மையின் தீமை ஏதோ? ஐய!''

என்றெல்லாம் பன்னிப் பன்னிக் கூறினன், தாடகை 'கொலை தொழில் அரக்கி' என! இறுதியில் அரக்கியைக் கோறி என்று ஆணையே இட்டிட்டான் முனிவன்.

தன் ஆசிரியர் கூற்றை ஏற்றுக் கொண்டான் இராமன். என்றாலும் தாடகையைத் தன் கண்ணால் கூற்றாய்க் காண வில்லையே! எனவே அவனுக்கு அவளைக் கொல்ல மனமில்லை, ஆனால் ஆசிரியரின் ஆணையைத் தவிர்க்கக் கூடாதே! அதனால்

''ஐயன் அங்கு அது கேட்டு அறன் அல்லவும் எய்தினால், அது செய்க என்று ஏவினால், பெய்ய! நின் உரைவேதம் எனக் கொடு செய்கை அன்றோ அறம் செயும் ஆறு என்றான்.''

ஆசான வாக்கு வேத வாக்கு எனக் கொண்டு தாடகை யைக் கொன்றான். தன் மனம் முழுமையும் ஒப்பாது!

தாடகையைத் தொலைத்த பின் முனிவர்களின் வேள்வி காத்து நின்றனர் இராம இலக்குவர். அப்பொழுது வான் வழி அரக்கர்கள் வந்து வேள்வியைக் கெடுக்கத் துணிந்தனர். அதனைக் கண்ட இலக்குவன் அவர்களை வீழ்த்தி அழிப்பதாகத் துள்ளினான்.

வேள்விச் சாலையில் குருதி வீழ்தல் கூடாது. எனவே இராமன் உடனடியாகச் சரங்கள் கொண்டு யாகசாலை மேல் கூடம் அமைத்திட்டான்.

அதன் பின்னர் போர்த் தொழில் கொண்டு அந்த வந்த அரக்கர்களை அம்பெய்து வீழ்த்தினான். கொலை தொழில், சுவாகுவைக் கொன்றொழித்தான். ஆனால், அவன் சகோதரன் மாரீசனைக் கடலில் செலுத்தி ஒளித்தான்! ஏன்?

மாரீசன், தன் அவதார நோக்கத்தை நிறைவேற்றுவதில் உறுதுணைப் பாத்திரமாக மாய மானாக — உதவுவான் என்பதனால் மட்டுமல்ல; அவன் கொலை தொழில் விரும்புவன் அல்ல, என்பதே முக்கிய காரணம்! அது எப்படிப் புரிந்திருகின்றது!

மாரீசனை இராவணன் அணுகிப் பேசிய போழ்தும், அவல மாய மானாக வந்து இராமனை ஆட்டங்காட்டி அலைக் கழித்த போழ்தும் அவன் பேசிய பேச்சுக்களில் இருந்தும் மேற்கொண்ட செயல்களில் இருந்தும் விளங்கும்.

ஆக, இந்த சம்பவத்தாலும் இராமன், போர்த் தொழில், அரக்கரில் கொடுமையானவர்களையேக் கொன்றான் எனத் தெரிகின்றது!

தண்டக வனம் புகுந்தனர் தயரதன் புதல்வர் இருவரும், சீதையுடன், அங்கே விராதன் எதிர்ப்பட்டான்; சீதையைக் கவர்ந்து சென்றான். இராமன் அவனுடன் போர் செய்து வீழ்த்தினான்.

இனி, சூர்ப்பணகைக் காட்சியைக் காண்போம்.

சூர்ப்பணகை அழகான பெண்ணுரு எடுத்து இராமனை மோகிக்கின்றாள்; சீதையைக் காண்கின்றாள்; அவளைத் தீர்த்தால்தான் இராமன் தன் வழிக்கு வருவான் எனச் சீதையைத் தொடர்கின்றாள். அதனைக் கண்ணுற்ற இலக்குவன் அவளுடைய உறுப்புக்களை அறுத்து விடுகின்றான்.

அவள் இராமனிடம் முறையிடுகின்றாள். அவன், அவள் அரக்கி தானே என்று ஏளனமாய், விட்டிடாமல், இலக்குவ னிடம் இவள் இழைத்த பிழை என்ன? என்று விசாரிக் கின்றான். இலக்குவன் அண்ணியின் மேல் பாய்ந்திடச் சென்றாள், அதனால் இது செய்தேன் என்றான.

சூர்ப்பணகையோ இராமனைச் சொந்தம் கொண்டாடி, மாற்றானைக் கண்ட போழ்து என் மனம் வேதனைப்படாதோ? என இடைமறித்துக் கூறலானாள். இராமன் அவளை ஓடிப் போ என்றான். அவளோ, தன்னை ஏற்குமாறு இராமனை இறைஞ்சினாள்.

இராமன் சினந்து சூர்ப்பணகையை அச்சுறுத்தினான். அப்பொழுது,

''நாடு அறியாத்துயர் இழைத்த நவை அரக்கி
    நின்அன்னை தன்னை நல்கும்.
தாடகையை, உயிர் கவர்ந்தசரம் இருந்தது;
    அன்றியும், நான் தவம் மேற்கொண்டு
தோள் தகையத்துறு மலர்த்தார் இகல்அரக்கர்
    குலம் தொலைப்பான், தோன்றி நின்றேன்,
போடுஅகல புல்ஒழுக்கை, வல்அரக்கி
    என்று இறைவன் புகலும்!''

இவ்வாறு சொல்லம்பை இராமன் அச்சூர்ப்பணகையின் பால் விட்டானேயன்றி அவளின் உயிர் கொல்லும் வில் லம்பை விட்டானில்லை ஏன்?

தன் அவதார நோக்க நாடகம் ஆரம்பம். ஆக அவ ளுடைய அங்கக் குறைகள் உதவும் என்று அவளை அழிக்காமல் விட்டான் என்பது மட்டுமல்ல, அவள் அங்கு யாரையும் கொலை செய்து தொலைக்கவில்லை; எனவே அவள் கொலை தொழில் அரக்கி எனக் கொள்ளவில்லை; அவளைக் கொல்லு தல் தன் கொள்கைக்கு ஏற்றதுமில்லையெனத் தெளிந்தே விடுகின்றான்!

சூர்ப்பணகை, மேலும் அவர்களை அச்சுறுத்தி விட்டு அகன்றாள்; கரன்முன் விழுந்து முறையிட்டாள். கரனும், போர் வீரர்களும் போர்க்கோலம் பூண்டு எதிர் எதிர்த்து வந்தனர்!

இராமனும் போருக்கு எழுந்தான்; அரக்க வீரர் மடிந்தனர். கரன் பெருஞ்சேனை கொண்டு வந்தான், சேனைத் தலைவர்கள் சேனைகள் அனைத்தையும், அழித்தொழித்து இராமன் கரனுக்குத் திருந்தும் வாய்ப்பினை நல்கி நின்றான்!

அப்படியிருந்தும் போர் வீரனுக்கு உண்டான இயல்பின் வண்ணம் கரன் இராமனுடன் நேருக்கு நேர் சண்டையிட வந்து நின்றான். இராமன் தன் ஒரே சரத்தால் கரனைக் கொன்றிருக்க இயலும். என்றாலும், கரன் பலவித உபாயங்களை மேற்கொள்ளும் வரையில் விட்டுக் கொடுத்தான். அத்தனை உபாயங்களையும் வீணடித்தான். கரன் தன் போர் தொழில்—கொலை தொழில் கொடுமையில் தீர்ந்தானில்லை. எனவே, இறுதியில் இராமன் கரனைக் கொன்றான்!

வேள்வி காத்தபோழ்து கொல்லாது விடுத்த மாரீசன் மறுபடியும் வந்தான் மாய மானாய்! தம்பியின் பேச்சினைக் கேளாது வந்த இராமன் வெகுவாக அலைக்கழிக்கப்பட்டதால் வெகுண்டு மாயம் செய்த மாரீசனைக் கொன்றான். முதலில் தான தந்த வாய்ப்பாலும் அவன் திருந்தவில்லையே என்ற காரணம்தான் இராமன் இம்முறை அவனைக் கொல்வித்தது!

சீதையைக் காணாது தேடித்தேடி வனத்துள் வந்தனர். இராம இலக்குவர், தமையனின் தாகம் தீர்க்க தண்ணீர் தேடிச் சென்றான். இளவல் அயோமுகி எதிர்ப்பட்டாள், அவனைத் தூக்கிச் சென்றாள். அவன் அவளுடைய அங்கங்களை அறுத்தெறிந்தான்.

தம்பியைத் தேடி வந்தான் இராமன்; நடந்ததெல்லாம் அறிந்தான். அவளை இலக்குவன் கொல்லாது விடுத்ததை இராமன் புகழ்ந்தான்.

"தொல் இருள், தனைக் கொலத் தொடர்கின்றாளையும், கொல்லலை; நாசியைக் கொய்து நீக்கினாய், வல்லை நீ; மனு

மூதல் மரபினோய் எனப் புல்லினள் — உவகையின் பொருமி விம்முவான்'' என்பார் கவிச்சக்கரவர்த்தி.

அயோமுகியாகிய அரக்கியின் நோக்கம் கொலை தொழில் அல்ல; காவல் தொழில்; அதனால் காதல் தொழிலை மேற் கொள்ள முயன்றாள். அத்துணையே அதனால் தான் அவளைக் கொல்லாது விடுத்ததற்கு இராமன் இலக்குவனைப் புகழ்ந் துரைத்தான். இதுவும், அவன் ஆதியில் கொடுத்த வாக்கிற் கேற்பவே அமைந்தது எனக் காண்கின்றோம்.

மேலும் வனத்தில் சென்று கொண்டிருந்த இராம இலக்குவர் கவந்தன் கையில் அகப்பட்டனர். விராதன் போலவே இவனும் அரக்கன் அல்லன். ஆனால், இவனும் கொலை தொழில் வெம்மை கொண்டவன்.

கவந்தன் இருந்த கோலத்தையும் நிலையையும் கண்டு, இருவரையும் உண்ணாமல் விடான் என்று தோன்றியது. இருவரும் அவன் தோள்கள் மீது ஏறிக் குதித்து அத்தோள் களை வெட்டி வீழ்த்தினரேயன்றிக் கொல்ல வில்லை. கையிழந் தவன் நிச்சயம் திருந்துவான்; அதனால், அவனுடைய 'கொலை தொழில் கொடுமை' நீங்கும் என எண்ணினான் இராமன்.

அதற்கேற்ப, கைகளையிழந்தவன் முன்னம் சாபத்தால் தான் பெற்ற உரு மாறி விண்ணுலகம் எய்தினான்!

அடுத்தது வாலி வதை! அவன் கொலை தொழிலனும்! அல்லன், அவனை இராமன் கொல்ல வேண்டிய கட்டாயமும் இல்லை. என்றாலும், அவனை இராமன் மறைந்து நின்று கொன்றான்; 'பழி' யெனும் அபவாதத்திற்கும் இடம் கொடுத்து விட்டான்.

இக்கொலை ஏன் நிகழ்ந்தது? இந்திரன் தன் கூறு ஒன்று 'வாலி'யாகத் தோன்றி இராமனுக்கு உதவுவதாக ஏற்பாடு.

ஆனால், அவன் உலகில் வந்த பின் தன் வரவின் நோக்கத்தை மறந்தான் ; இராவணன் விழைந்த வண்ணம் அவனுடன் கூட்டுச் சேர்ந்தான். எனவே பயனற்று இருந்தவனைப் பயணப் படுத்தி விட்டான் பரலோகத்திற்கு. 'ஆகவே, இந் நிகழ்ச்சி கொலை தொழில் அரக்கர் கொடுமை போக்கும் தன்மையின்பாற் பட்டதன்று.

அரக்கர் தலைவனான இராவணன் தம்பியாகிய வீடணன் வந்தான், இராமனிடத்தில்! அவனும் அரக்கன் தானே! அவனைக் கொல்ல நினைத்தானா? மாறாக, அவன் வேண்டிய வண்ணம் அவனைத் தம்முடன் சேர்த்துக் கொள்ள அன்றே முடிவு செய்தான்! இந் நிகழ்ச்சியிலும் இராமன் கடைப் பிடித்த கொள்கை, 'கொலை தொழில் அரக்கர் கொடுமை தீர்ப்பதே யென்பதல்லால், அரக்கர் தம்மை அழித்தொழிப் பது என்பதல்ல எனப் புரிகின்றது!

இலங்கையில் முதல் நாள் போரில் இராமனும் இராவண னும் நேர் நின்று பொருதனர்; இராவணன் மகுடம் இழந்து நாணி நின்றான்! அவனை அம்பெய்து அப்படியே கொல்ல வேண்டியது தானே!

வெறுங்கையன் என்ற பெருநோக்கு மட்டுமா? அல்ல. இராமனின் அவதார நோக்கம் கொலையல்ல; கொலை தொழிலர் கொடுமையைப் போக்குவதே!

தான் சொன்ன சொல் மனதில் ஊறியிருப்பவும், இராவ ணனுக்கு அறிவுரைகள் பல பகன்றான். 'இன்று அவிந்தது போலும், உனதருமை' என்று பரிவுணர்வோடு கேட்டான், இராமன்!

"சிறையில் வைத்தவள் தன்னை விட்டு உலகினில் முறையில் வைத்து, நின் தம்பியை இராக்கதர் இறையில் வைத்து, அவற்கு ஏவல் செய்து (இருத்தியேல், இன்னும்)

தேவர் முதல் தறையில் வைக்கிலென்—நின் (தலைவாளியின் தடிந்து) பேர் என்று கூறியவன், நீ இன்னும் மனம் திருந்தி உன் கொடுமையைப் போக்கிக் கொள்ள நினைக்க வில்லை யென்றால்,

"இன்று போய், போர்க்கு நாளை வா" என நல்கினான்!

ஆக, இங்கேயும், கொலை தொழில் அரக்கர் கோனின் கொடுமை கண்டும் அவனை அழிக்க நினைக்க வில்லை, இராமன், எடுத்த எடுப்பிலேயே! மாறாக, அவன் திருந்த—கொடுமை போக—வாய்ப்பு அளித்தான. பின்னர், அவன் திருந்தாது வந்தமையால் போரில் அவன் உயிரைப் போக்கினான், எனக் காண்கின்றோம்!

இலங்கையில் போர் தொடர்ந்து நடைபெறுகின்றது! ஒவ்வொரு அரக்கத் தலைவனின் உயிரும் போகின்றது. கும்பகர்ணனை எழுப்புகின்றனர். போருக்குச் செல்ல, எழுப் பியதும் பலவேறு அறிவுரைகளை அண்ணனுக்கு அவன் எடுத்துச் சொல்லுகின்றான்.

இராவணன் மிகக் கடிந்து பேசுகின்றான். இறுதியில் கும்பன் போர்க்களம் சென்றிட்டான்.

கும்பனைக் கண்டான், இராமன் வீடணனைப் பார்த்தது "சமரம் வேட்டது ஓர் ஆள் என உணர்கிலேன், ஆர் கொலாம் இவன்?" எனக் கேட்டான்.

அவன் தனக்கு மூத்தவன், இராவணனுக்கு இளையவன் என்று. வீடணன் தன் உறவின் முறை காட்டி, அவனுடைய பேராற்றல் திறம்தனை விளக்கிக் கூறினான். சுக்ரீவன் ஆலோசனைக்கு இணங்க இராமன் கும்பனைத் தங்கள் பக்கம் சேர்த்துச் கொள்ளுதல் ஏற்றது என்றான்; வீடணன் கும்பனிடம் சென்றான்.

எவ்வளவோ வாதாடியும் கும்பன் வரமறுத்து விட்டான் போர் தொடர்ந்தது. இராமன் படைத்தலைவர்கள் ஒவ்வொருவராகத் தளர்ந்தனர். இராமனே பொருது நின்றான். இராவணன் அனுப்பிய சேனையையெல்லாம் பொருது அழித்தான்; தனித்து நின்ற கும்பனிடம் பேசலுற்றான்!

''எதியோடு எதிர் பெருந்துணை இழந்தனை:
எதிர் ஒரு தனி நின்றாய்;
நீதியோனுடன், பிறந்தனை ஆதலின்
நின் உயிர் நினக்கு ஈவென்
போதியோ? பின்றை வருதியோ அன்று எனின்:
போர்புரிந்து இப்போதே
சாதியோ? உனக்கு உறுவது சொல்லுதி,
சமைவுறத் தெரிந்து''

என அவன் விருப்பினைக் கேட்டான்.

கும்பன், இதற்குத் தன்மானமுள்ள பதிலுரைத்துப் போரினைத் தொடர்ந்தான், இறுதியில வீழ்ந்தான்.

இங்கு, இந்நிகழ்ச்சியிலும் நாம் புரிந்து கொள்வது என்னவென்றால்; இராமன் எடுத்த எடுப்பிலேயே எந்த அரக்கனையும் கொன்று வீழ்த்த விரும்பவில்லை. அவர்கள் திருந்துவதற்கு வாய்ப்புத் தந்தான். திருந்தாத நிலையில் தான் அவர்களைக் கொன்றான் என்பதேயாகும்.

ஆகவே, துவக்கத்தில் தேவர்கள் எல்லோரும் கூடித் திருமாலிடம் அரக்கர்களை ஒழித்துக் கட்டவேண்டும் என்று வேண்டிய பொழுது அவனோ, கொலை தொழில் அரக்கர் தம் கொடுமை தீர்ப்பென்; என்றுதான் கூறினான். அதற்கிணங் கவே அனைத்து கூட்டங்களிலும் நடந்து கொண்டான். இறுதியில் அரக்கருள், ஒருவனான வீடணனிடமே இலங்கை ஆட்சியை ஒப்படைத்தான் எனக் காண்கின்றோம். சொல்லும் செயலும் ஒத்த மனோ நிலை மிளிர்கின்றது!

# அயோத்தியின் மதலை!

கோசல நாடு பெருவளம் கொழித்த நாடு. அங்கு ஆற்றுவளம் அளவிடற் பாலது, அன்று. மருத நிலமாட்சி வகுத்துரைக்கும் தரத்தது அன்று. கடல் வாணிகம் கரை கொண்டது அன்று. உழவர்தம் உழைப்பின் மேன்மை உரைக்கும் தரத்தது அன்று. இவற்றின் விளைவாக நால் வகை நிலங்களும் அங்கே நனி வளம் பெற்று நின்றன; செல்வப் பொலிவு செப்பொணாத அளவிற்கு மிளிர்ந்தது; மாந்தர் பற்பல கலை வல்லவர்களாய்த் திகழ்ந்தனர்; மங்கையர் மாண்பு மாசற்ற செல்வத்தாலும் கல்வியாலும் மேலோங்கியது. ஆங்காங்கே அறச் சாலைகள் அமைந்து வந்த வறியவர்க்கு வாரி வழங்கின; நறுமணப் புகைகள் நாடெங்கும் நாள்தோறும் மண்டின; இயற்கை எழிலொடு நங்கையர் அழகும் இணைந்தது; கலைகள் வளர்ந்தன, காட்சிப் பொருள்கள் மிகுந்தன; வறுமையே இன்றி, வளம் பெருகி ஆங்காங்கே முறைப்படி விழாக்களும், வேள்விகளும் நடந்தன; ஆடவரும் மகளிரும் ஒழுக்கத்தால் விழுப்பம் பெற்றிருந்தனர்!

நாட்டின் வளமே நவில நவில நாஊறுகின்றதென்றால் அந்நாட்டுத் தலைநகர் பற்றிக் கூறவும் வேண்டுமோ?

> "செவ்விய மதுரம் சேர்ந்த நல்பொருளின்
> சீரிய கூரிய தீம்சொல்
> வவ்விய கவிஞர் அனைவரும், வடநூல்
> முனிவரும், புகழ்ந்தது; வரம்புஇல்

எவ்உலகத்தோர் யாவரும், தவம்செய்து
ஏறுவான் ஆதரிக்கின்ற
அவ் உலகத்தோர், இழிவதற்கு அருத்தி
புரிகின்றது—அயோத்தி மாநகரம்''

என்பார், கம்பர்.

வையத்துள் வாழ்வாங்கு வாழும் தவமியற்றியதால் தெய்வத்துள் வைக்கப்பட்டு உறைதற்காய்ச் செல்லும் சிறப்புடைய அவ்வானுலகத்தோரே இந்த அயோத்தி மாநகர்க்கு இறங்கி வர வேட்கை கொள்வராம்.

இவ்வாறு, புகழ்வது, செவ்விய மதுரம் சேர்ந்த நல் பொருளின் சீரிய கூரிய தீம் சொல்லாகிய தமிழை வவ்விய கவிஞரான—கவிசக்கரவர்த்தியான—கம்ப நாட்டாழ்வார் மட்டுமன்று!

'என் போன்ற முனிவர்களும் இமையவர்களும் மணி மாட அயோத்தி என்னும் பொன்நகரினைப் புகல் அடைவோம் அல்லவா' என வடநூல் முனிவராகிய விஸ்வாமித்திரரும் புகழ்ந்தார்!

இந்நகரை இன்னமும் பலவிதமாக வர்ணித்த கம்பர், திருமால் இங்குதான் அவதரிக்கப் போகின்றார் என்பதைச் சூசகமாக நமக்கு எடுத்துச் சொல்ல ஆசை கொண்டார். அயோத்தி நகரை நிலமகளின் முகமோ! திலகமோ! கண்ணோ! நிறைநெடு மங்கல நாணோ! இலகு பூண் முலைமேல் ஆரமோ! இல்லை, அவளுக்கு என்று தோன்றிய இனிய மலரோ! மாயோன் மார்பில் நன்மணிகள் வைத்த பொற் பெட்டியோ!' என்றெல்லாம் இலக்குமிக்குச் சம்பந்தப் படுத்தி வர்ணிக்கின்றார்! ஏன்? இந்நகரின் பொலிவைக் கண்டு வானோர்தான் ஆசைகொண்டு கீழிறங்குவர்; ஆனால், வானுக்கும் அப்பால் உலகத்தோனாகிய—வைகுந்த வாசனாகிய

—திருமாலே தங்கப் போகின்ருர் என்ருல், எல்லா வகை யானும் அந்நகரம் அவ்வைகுந்தமாக மாற வேண்டாமா? மாறிய காட்சி தரவேண்டாமா? எனவே, அயோத்தியை 'வானோர் உலகின் மேல் உலகமோ! ஊழிக் காலத்தேயும் அழியாது நிலைத்து நிற்கும் இருப்பிடமோ!' என்று வியந்தவர், இறுதியில் ஓய்ந்து போய் 'யாது என உரைப் போம்!' எனத் திகைக்கின்ருர்!

இத்தகைய மாபெரும் நகரில், உலகம் முழுதுடைய தயரத சக்கரவர்த்தியின் தலைநகரில், தேர்ப்படை, யானைப் படை, குதிரைப் படை, காலாட் படை ஆகிய நால்வகைப் படைகளும் இல்லாமல் இருக்குமா? கம்பர், தயரதனுடைய அரசியல் ஆற்றலை அளக்கும் பொழுது நேரிடையாக இந்த நால்வகைப் படையைப் பற்றி நவிலவில்லையே! ஆம், அஃது அவராலேயே அரைதற்கு ஒண்ணுதது ஆயிற்று!

ஆகவே, தக்கோனை—திருமாலையே—இதனைப் பற்றிக் கூறச் செய்கின்ருர்!

அரக்கர் தம் அட்டுழியங்களை அடக்க வேண்டும் என்று தேவர்கள் அனைவரும் திருமாலை இறைஞ்சி நிற்கின்றனர். அப்பொழுது அவன்,

"............வருந்தல்; வஞ்சகர்
தம்தலை அறுத்து, இடர் தணிப்பென் தாரணிக்கு

என்பான். பின்னரும்,

"மசரதம் அனையவர் வரமும், வாழ்வும், ஓர்
நிசரத கணைகளால் நீறுசெய்ய, யாம்
கச ரததுரக மாக்கடல் கொள் காவலன்
தயரதன், மதலையாய் வருதும் தாரணி"

எனப் பகர்ந்து தயரதனின் படை பலத்தைப் புகழ்வான்!

இவ்வாறு, அவனுடைய நாற்படைகளை எடுத்துக் காட்டி, தான் அங்கு அவதரிப்பதாக அரைவானேன்?

'பின்னர், இராவண வதத்திற்குத் துணையாக அப்படைகளைக் கொண்டு செல்வேன்' என்று குறிக்கவா? அல்ல! எப்படித் தெரிகின்றது?

'தசரதன் மதலையாய் வருதும்' என்றுதானே குறிப்பிட்டான்!

'மதலை' யென்றால் வளர்ந்து, பருவம் அடைந்து அப்படைகளுக்கு அதிபதியாகி, அரக்கரை அழிக்க அப்படைகளை நடத்திச் செல்லப் போகின்றான் என்று ஏன் கொள்ளக் கூடாது என்று வினவத்தான் தோன்றும்! அவ்வினாவிற்கும் விடை கொடுத்து விடுவதுபோல் விமலன் விளம்புகின்றான்.

> "வளையொடு திகிரியும், வடலவை தீர
> விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்
> இளையர்கள் எனஅடி பரவ ஏகி, நாம்
> வளமதில் அயோத்தியில் வருதும்"

என்றனன்; இப்படிச் சொல்வதற்கு முன்பே, தனக்குச் சேனை வீரர்களாக உதவ,

> "வான் உளோர் அனைவரும் வானரங்கள் ஆய்,
> கானிலும், வரையினும், கடிதடத்தினும்,
> சேனையோடு அவதரித் திடுமின் சென்று"

என ஆக வேண்டியதை எல்லாம் அருளின் ஆழியான் ஆகிய ஆண்டவன் ஆணையிட்டு விடுகின்றான்!

ஆகவே, அயோத்திப் படைகளை எடுத்துக் காட்டிய அவன், அவற்றைத் தன் அவதார நோக்கிற்குப் பயன் படுத்தப் போவது இல்லை என்பதை மறைமுகமாக வானவர்களைச் சேனாவீரர்களாக உருவெடுக்கச் சொல்லும் முகத்தான் கூறுகின்றான்.

அது மட்டும் அல்ல! தான் அயோத்தியில் தயரதன் அரண்மனையில் அவதரிக்கப் போவதாக சொன்னாலே போதுமே! அவதரிப்பவன் திடும் என பருவம் அமைந்த, வீரம் மிளிர்கின்ற ஆண் பிள்ளையாகவா குதிப்பான்! சிறு குழந்தையாய்த் தானே தோன்ற ஏறும்! அப்படியிருக்க 'மதலையாய் வருதும்' எனக் குறிப்பாக ஏன் சொன்னான்?

அச் சொல்லில்தான், பின்னாளில் நடக்கப்போகின்ற வரலாறு பொதிந்திருக்கின்றது! ஆம்; "நான் அயோத்தி மன்னர் மன்னன் தயரதனுக்குப் புதல்வனே, பெயர் அளவில் அவனுக்குப்பின் அவனுடைய நாட்டை ஆளும் உரிமை பெறப் போவது இல்லை; வானவர் வானரப் படைகளாய் உருவெடுத்து தங்கப் போகின்ற கானகம் போகின்றேன்!" என்பதையெல்லாம் சொல்லாமல் சொல்ல வந்த மர்மச் சொல்லே மழலைமொழி 'மதலை'யாகும்!

# அருந்தவன்

உத்தானபாதன் திருமகனாகிய உரோமபதன் நாட்டில் நெடுங்காலம் மழையின்றிக் கொடுந்துயரம் ஏற்பட்டது. வேத நூல் பயின்ற முனிவர்களை அழைத்து பெருந்தானங்கள் செய்தான்; பயனில்லாது போயிற்று. கலைக்கோட்டு முனிவன் காலடி பட்டால் மழைபெய்திடும் என்று முனிவர்கள் கூறினர்.

அவ்வாறே கலைக்கோட்டு முனிவரை அழைத்து வர வேண்டும் என முடிவேற்றனர். ஆனால் அவரோ இப்பூவுலகில் வாழ்கின்ற மனிதர்களை யெல்லாம் விலங்கு என்றே கருதி வளர்ந்தவர்; அத்தகைய, குற்றமற்ற வெள்ளை மனத்து வெகுளியைத் தம் நாட்டிற்குள் எந்த வகையில் அழைத்து வருவது என அனைவரும் ஆலோசித்திருந்தனர். அப்பொழுது சில மாதர்—பொது மகளிர்—எழுந்து, தாங்கள் சென்று அவரை அழைத்து வருவதாகக் கூறினர். இதனை,

> "ஓத நெடுங்கடல் ஆடை உலகினில்வாழ்
> மனிதர் விலங்கு எனவே உன்னும்
> கோது இல் குணத்து அருந் தவனைக் கொணரும்வகை
> யாவது? எனக் குனிக்கும் வேலை,
> சோதி நுதல், கரு நெடுங்கண், துவர்இதழ்வாய்,
> தரளநகை, துணைமென் கொங்கை,
> மாதர் எழுந்து, யாம் ஏகி அருந்தவனைக்
> கொணர்தும்" என, வணக்கம் செய்தார்.

எனக் கவிச்சக்கரவர்த்தி சொல்லோவியம் தீட்டுகிறார்!

கலைக்கோட்டு முனிவரை அறிந்திருந்த ஆன்றோர்கள் எல்லாம் 'அருந்தவன்' எனக் குறிப்பிட்டனர். அது சரி. ஆனால், அந்தப் பொது மகளிர் வாயாலும் அக்கலைக் கோட்டு முனிவரை 'அருந்தவன்' எனச் சொல்ல வைத்துள்ளாரே கம்பர்! ஏன்?

யாப்பு முறை வழுவாது, அழகான வேறு சொல்லைப் பெய்திட ஏலும் என்று எமக்கே தோன்றும் பொழுது, கவிச் சக்கரவர்த்தி, சொன்ன சொல்லையே சொல்வாரா?

'அரிய தவம் செய்பவன்' என்ற பொருள்பட பொது மகளிர் வாயிலாகவும் சொல்லப்போமோ? இல்லை. பின் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை அறியும் பொழுதுதான் அச்சொல்லா டலின் நயம் மிளிர்ந்திடக் காண்கின்றோம்!

தம்மிடம் வருபவருடைய அழகினை அனுபவிப்பது இல்லை; அறிவினில் ஆழ்ந்திடுவது இல்லை; மடமை கண்டு மனம் வருந்துவது இல்லை; உடல் ஊனத்தைப் பொருட் படுத்துவது இல்லை; ஆடையில் மயங்குவது இல்லை; ஆடை யில் மயங்குவது இல்லை; பேசும் மொழியில் பேதம் காண்பது இல்லை; செயல்களின் மென்மையால் குறைப்பட்டுக் கொள் வது இல்லை; வன்மையால் சலித்துக் கொள்வதும் இல்லை; சாதி, மதபேதங் காண்பது இல்லை; எந்நாட்டவரும் என் நாட்டம் கொண்டு அணுகினால் போதும்! என்னும் நாட்டம் கொண்டவர்—பொருள் ஒன்றே குறிக்கோள். இதுவே, பொது மகளிரின் நிலை.

இந்நிலைக்கு இணையான நிலையினர். கலைக்கோட்டு முனிவர்! இயற்கை தந்த பொருள்கள் எதிலும் பேதம் காணாதவர். ஆண், பெண் வேறுபாடு அறியாதவர், இன்ப துன்ப மாறுபாடு இல்லாதவர். கேட்கும் ஒலியெல்லாம் தந்தையின் ஒலியே அல்லாமல் வேறு அறியாதவர். அருள் பொதிந்த தவம் ஒன்றே குறிக்கோள். இதுவே கலைக்கோட்டு

முனிவரின் வாழ்க்கை நிலையும், மனோ நிலையும்! அந்த வகையில் உலகம் அறியாது வளர்த்து வந்தார் அவர் தம் தந்தை.

அவரை அழைத்து வரச்செல்லும் வனிதையர்தம் வர்ணனையில் கவிச் சக்கரவர்த்தி நம்மையே மயக்குகின்றார்!

'நம்மையே' என்றால்?

உலகியல் இன்பம் முழுதும் மாந்தி, மாதர் தம் மடியிலேயே மயங்கிக் கிடந்து, அவர்தம் கிளி மொழிப் பேச்சிலேயே சொக்கிப் போயிருந்து, அனைத்தும் ஓய்ந்தபின் மனத் தெளிவு ஏற்பட்டு, 'சே, என்னே பெண்ணின்பம்? ஒரே வகை மாமிசப் பிண்டங்களாக ஆண்டவனால் பிறப்பிக்கப் பட்ட சில தசை வளர்ச்சிகளிலேயும், தசை மாறுபாடுகளிலேயும் ஏற்படும் ஈர்ப்பு மயக்கத்தின் பெயர்தான் காதல்—காமம்—சிற்றின்பம்—இல்லற இரகசியம் என்றெல்லாம் பெயர் பெற்று வாழ்நாளில் பெரும் பகுதியை வீணாக்கி விட்டதே! இனியேனும் இறையருள் நாடிப் பேரின்ப சுகம் பெற முயல்வோம் என்று முனைகி, பக்தி ஆசாரக் கிரியைகளில் இறங்கும் வயதினரைத்தான் 'நம்மையே' என்று குறிப்பிட்டேன்!

இது, இந்தக் காலத்தில் மட்டும் தோன்றும் குறை யென்று நினையற்க! அதே உரோமபதன் மக்கள் மழையின்றி மயங்கி வாடுகின்றனரே என் செய்வேம் என்று அங்கலாய்த்து ஆலோசனை சபை கூட்டியிருக்கின்ற துயரச் சூழலிலும் அம் மாதரை,

> .................. பணிப் பிறையைப்
> பழித்த நுதல், பணைத்த வேய்த்தோள்,
> ஏங்கும் இடை, தடித்த முலை, இருண்ட குழல்
> மருண்ட விழி, இலவச் செவ்வாய்ப்
> பூங்கொடியீர்!''

என்று வர்ணித்து அனுப்புகின்றான் என்றால் கேட்க வேண்டுமா? கம்ப ராமாயண அமுதுண்டு ஆனந்தத்தில் மூழ்கியிருக்கும் நமக்கு பெண் போதை ஏற்படாதா? சரி, போகட்டும்!

அம்மாதரார், கலைக்கோட்டு முனிவரின் உறைவிடத்திற்கு ஓர் ஓசனை தூரத்திலே ஒரு பன்னசாலை யமைத்துத் தங்கினர். அவர்களும் தவவேடம் பூண்டனர்.

கலைக்கோட்டு முனிவரின் தந்தையார் பன்னசாலையை விட்டு வெளியேறும் வரைக் காத்திருந்தனர். அவர் வெளியேறிய பின்னர் அவர்கள் மெல்ல அங்கே சென்றனர்!

உலகோரை யெல்லாம் விலங்குகளைக் காண்பது போலக் காணும் அக் கலைக்கோட்டு முனிவர், இவர்களும் தவவேடம் பூண்டிருந்ததால் தன்னைப் போன்றவர்கள் என எண்ணினார்; அருக்கியம் முதலியன கொடுத்தார்; ஆசனம் அளித்தார்; அமரச் செய்தார்; இனிமையாக குசலப் பிரசினம் செய்தார். அவ்வனிதையர் முனிவரைத் தொழுது விட்டு, விரைவில் தம்முடைய பன்னசாலைக்கு ஏகிவிட்டனர்

சின்னாட்கள் இவ்வாறு கழிந்தன; ஒருநாள் அம்மாதரார் மா, பலா, வாழை, தெங்கு ஆகியவர்களைக் கொண்டு சென்றனர். முனிவரின் குடிலுக்கு, இவை அமுதத்தினும், இனியவையாகும்! அருந்தவ, அருந்து என வேண்டினர்; அவரும் அருந்தினார். அவ்வாறு அருந்து அவனை (அருந்தவனை) தம் பன்னசாலைக்கு ஒருநாள் வரவேண்டும் என வேண்டினர். 'சரி' என அவரும் ஏகினார்!

அம்மாதரார், 'இதோ எம்மிடத்திற்கு வந்துவிட்டோம்' என்று சொல்லிச் சொல்லிய வண்ணமே, தங்கள் நாட்டு எல்லைக்கு முனிவரை அழைத்து வந்து விட்டனர்!

முனிவர் வரவால், வானம் கருமுகில் பெற்றுப் பெரு மழை பெய்திடத் தொடங்கியது.

ஆக, 'முனிவர்கள் எல்லோரும் கலைக்கோட்டு முனிவரை 'அரியதவம் செய்வோன்' என்று குறிக்க 'அருந்தவன்' எனப் பேசினர். கம்பரோ, அச்சொல்லையே புணர்ச்சி இலக்கண விதிப்படி இணைத்து, மாதராய் தந்திடும் பழங்களை அருந்தப் போகின்றார்—அதன் விளைவாக அம்மாதரார் சொல்லில் மயங்கப் போகின்றார்—என்பதை மறைமுகமாக உணர்த்தி, அம் மாதரார் வாயிலாக, அருந்து + அவன் = அருந்தவன் என்றே சொல்ல வைக்கின்றார்!

இவ்வளவு ஆழமாகப் பொருளைக் கண்டு இன்புறும் பொழுது கவிச் சக்கரவர்த்தி சொல்லில் எவ்வளவு தோய்ந்து அதன் பல பொருள்களில் எவ்வளவு ஆழ்ந்து வெளியிடு கின்றார் என நமக்கு வியப்பும் களிப்பும் ஏற்படுகின்றது!

# கைகயன் தனையை

பிள்ளைப் பேற்றினை விழைந்தான் பேரரசன், தயரதன் கலைக்கோட்டு முனிவரைக் கொண்டு வேள்வி நடத்தினால். அது கைகூடும் என்றார், வசிட்டர். அவ்வாறே வேள்வியும் நடந்தேறியது. வேள்வித் தீயில் பூதம் ஒன்று அழகிய தட்டில் வெண்மையான பிண்டம் ஒன்றை ஏந்தி வந்தது; தரையில் வைத்தது; மறைந்தது.

அப்பிண்டத்தை மனைவியர் மூவர்க்கும் முறையே அளித்திடும் வண்ணம் தயரதனிடம் வசிட்ட முனிவர் கூறினர். முதலில் ஒரு பங்கினை 'காமரு கோசலை கரத்தில்' அளித்தான்; மூன்றாவதாக, 'சுமித்திரைக்கு' அளித்தனன். இவ்வாறு, முதல் மனைவியையும் மூன்றாம் மனைவியையும் முழுப் பெயர்கள் கூறிக் காட்டினார், கம்பர்.

ஆனால், அவர்களுக்கிடையில் இரண்டாவதாக யாருக்குக் கொடுத்தான்? அங்கேதான் கம்பரின சொல் திறம் மிளிர் கின்றது!

எஞ்சிய மனைவி 'கைகேயி' தானே என்பதால் 'கைகேயி யிக்கு அளித்தனன்' என்றுதான் சொல்லத் தோன்றும், நமக்கு!

ஒரு சொல்லின் செல்வன்—கவிச் சக்கரவர்த்தி— அவ்வாறு நம்மைப் போல் சொல்லி விட்டால் என்ன பெருமை? 'கைகயன் தனையை தன் கரத்தும் அளித்தனன்'

என்கின்றார், கம்பர்! ஏன்? 'கைகேயி தன்னன்புக் கரத்தும் அளித்தனன்' என்று பாடல்வரி அமைந்தாலும் யாப்பு கெடாதே!

கைகேயி தயரனது உள்ளங் கவர்ந்த மனைவிதான்; பட்டத்து அரசிதான்!

ஆனால், பின்னாளில், வெண்ணெய் திரண்டுவரும் பொழுது தாழியை உடைக்கப் போகின்றாளே! இராமனைக் காட்டிற்கு அனுப்பி, பரதனுக்கு முடிசூட்டும் திட்டத்தின் தாய் ஆகப் போகின்றாளே என்பதை நினைந்தார், கம்பர். ஆகவே, இவளையும் அவ்விரு பத்தினியர்க்கு இணையாகக் குறிப்பிட மனம் வரவில்லை.

எந்தப் பெண்ணுமே தன் கணவனோடு பிணங்கினால் அவளுடைய தாய் தந்தையர் நினைவையே கொள்வர் என்ற மனோதத்துவம் தோன்றியது மனத்தில் எனவே, கைகேயியைக் 'கேகயன் மகள்' எனக் குறிப்பிட்டார்.

மூன்று தாயரும் பிள்ளைகள் பெற்றதை எடுத்துரைக்கும் போழ்தும்,

**'திறம் கொள் கோசலை', 'கேகயன் மாது',**
**'இளைய மென் கொடி—விடம் கிளர் விழியினாள்'**

என்று குறிப்பிடுகின்றார், கைகேயியை நேர் பெயரால் கூறாமல்!

கைகேயின் மனத்தைக் கெடுக்கக் கூனி அவளுடைய அரண்மனைக்குச் சென்றாள் எனக் கூறும் பொழுதும், 'கேகயன் தோகை கோயில்மேல்', 'கேகயன் மடந்தை', 'கேகயர்க்கு இறை திருமகள்', 'கேகயன் அன்னம்' என்றெல்லாம் குறிப்பிடுவார்!

அதற்கேற்பவே, அவளும் தயரதனிடம் இரண்டு வாரங்கள் கேட்கும் பொழுது, தன்பாலேயே வளர்ந்த இராமனை, 'சீதை கேள்வன்' எனப் பிரித்துக் கூறுவாள்! பரதனை, 'என் சேய்' என்று குறிப்பிட்டாள்.

ஆகவே, பின்னுளில் கைகேயி எப்படித் தன் கணவனின் பார்வைக்குப் படப் போகின்ருள் என்பதை முன்னமேயே சுட்டிக்காட்டிச் சொல் அமைத்துள்ளார், கவிச் சக்கரவர்த்தி —கம்பர்—எனக் கண்டு வியக்கின்ருேம்!

# திறம் கொள் கோசலை

''பெறுமவற்றுள் யாமறியவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற''

என்று திருவள்ளுவர் பிள்ளைப் பேற்றின் பெருமையினைப் பாடுகின்றார். பிள்ளைகள் பெறுதலின் அருமையைப் பிள்ளைப் பேறு இல்லாது தவிப்போரே உணர்வர்! அவ்வாறுதான் தயரதனும் தவித்தான். பின்னர், தவ முனிவர்களின் ஆசியினையும், வேள்விக் கிரியைகளையும் ஏற்று மூன்று மனைவியரும் கருத்தரிக்கும் அருள் பெற்றான். இது பிள்ளைப் பேற்றிற்காக மனம்படும் தொல்லை! அத்தொல்லையின் இறுதியில் பெறுவது ஏக்கம் [பிள்ளையே இல்லாது போயின்] அல்லது ஊக்கம் [காலம் போன காலத்திலேனும் பிள்ளையை எய்தி விட்டால்!] இத்துயர் தாய் தந்தையர் இருவர்க்குமே பொது.

ஆனால், கருத்தரித்து விட்டபின் உடலியலால் படும் தொல்லையோ தாய்க்கேயாகும்! ஆண்டவன் படைப்பின் இரகசியம் இது; என் செய்ய? ஆண் மகன் கருத்தரிக்க எந்த முன்னேற்றமான விஞ்ஞானம்தான் செயலாற்ற முடியும்? ஆகவே, கருக் கொண்ட அந்தப் பத்து மாதங்களும் பத்தினியர் படும் இன்ப வேதனை எடுத்தியம்பும் திறத்தது அன்று!

இளம் பெண்டிர்க்கே இக்கதியென்றால் வயது முதிர்ந்த பின், உடலியற் கூறுகள் எல்லாம் உறுதிப்பட்டு விட்டபின்

ஒரு தாய் கருவுற்ருள்; பிள்ளையை ஈன்றெடுத்தாள் என்ருல் அந்தத் தாய் பட்டிருக்கக் கூடிய துன்பத்தை அவள் ஒருத்தியேதான் முழுமையாய் உணர்ந்திருக்க முடியும்! அதற்காக அவள் எய்திய வல்லமை—திறம்—எத்தகையது என்பது எடுத்தியம்ப அவளாலும் ஆகாது!

அத்தகைய நிலையை எய்தியவளே கோசலை! தயரதன் பதினுயிரக் கணக்கான ஆண்டுகள் இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டு, ஒருவர்பின் ஒருவராய் மூன்று மனைவியரை மணந்தும் ஆட்சிக்கு உரிய பிள்ளையொன்று அவர்கள் மூலம் தோன்றவில்லை! இறுதியில் பிள்ளைப்பேற்று வேள்வியின் பயனுய் அம்மூவருமே கருத் தரித்தனர்! உரிய காலத்தில் மக்களை ஈன்றெடுத்தனர். இதனைக் கூறவந்த கம்பர் முதலில் கோசலை குழந்தையைப் பெற்ருள் என்பதை,

"திருஉறப் பயந்தனள்—திறம் கொள்கோசலை"

எனக் குறிப்பிட்டுள்ளார்.

கைகேயி ஈன்றெடுத்ததை,

"நல்கினுள், மாசு அறுகேயன் மாது"

என்று கூறியுள்ளார்.

சுமித்திரை ஈன்றெடுத்ததை,

"பயந்தனள், இளைய மென் கொடி."

என்றிட்டார்!

ஏறத்தாழ மூவரும் பிள்ளைப் பேற்றின் ஒரு குறிப்பிட்ட வயது தாண்டிய பின்னரே பிள்ளைகளை ஈன்றெடுத்திருக்க மூவர்க்கும் வெவ்வேறு சொற்ருெடர்களைக் கம்பர் கையாண்டிருப்பது ஏன்? சொன்னதையே திருப்பிச் சொல்ல வேண்டாம் என்று நினைத்தாரா? ஆய்வோம்?

வயது முதிர்ந்தபின் ஈன்றதால் 'பெருந்திறமை' தேவைப்பட்டது என்போமேயானுல், அந்நிலை அம்

மூவர்க்குமே பொதுதானே! ஏன், கோசலைக்கு மட்டும் 'திறம் கொள்' என்னும் அடையிட்டார்? மேலும் வினைத் தொகையைக் கையாண்டது ஏனோ—இன்னமும் அவள் பிள்ளைபெறப் போகின்றுளா!

ஆக, 'திறம்கொள்' என்றது உடல் திறமை—வல்லமை—காட்ட அன்று! மனத்தால், 'திறம் கொள்' என்று கருதியே கம்பர் எழுதியுள்ளார் எனத் தோன்றுகின்றது! அத்தோற்றம் சரிதானா?

வினைத் தொகையின் இறந்தகால நிகழ்ச்சியா எண்ணிப் பார்ப்போம்

உலகம் முழுதுடையவனாகக் குடைச் சிறப்பு மேலோங்க ஆட்சி செய்தவன் தயரதன். அவனுக்குப் பட்டத்து ராணியாக முதலில் வாய்த்தவள் கோசலை. தனியொரு நிலையினளாக விளங்கத்தான் எந்தப் பெண்ணுக்கும் தோன்றும்; சாதாரண மனிதனுக்கு வாய்த்த மனைவியே—அவனுடன் மனோ ஒற்றுமை குறைந்திருப்பினும் கூட—மற்றொருத்தியுடன் அவன் மணங்கொண்டால்—ஏன் மனம் கொண்டு தொடர்பு கொண்டாலேகூட—சகிக்க மாட்டாள்; தன் கணவனின் அன்பைக் கூறுபோட்டுக் கொள்ள விரும்ப மாட்டாள். இது உளவியல் உண்மை. ஆனால், தயரதன்—காரணம் அதுவேயானாலும்—வேறு பெண்டிரை மணக்க—அறுபதினாயிரம் ஆசை நாயகியருள் ஒருவராக அல்ல, பட்டத்து ராணிகளாகவே மணக்க—அதனைக் கண்டும் கோசலை மனம், குமுறாமல் இருந்தாள்; சினவாமல் இருந்தாள். அது மட்டுமல்ல, தெய்விக மனப்போக்குடன் வாழ்ந்தாள். இந்தப் பரந்த உள்ளம் பெறுவதற்கு அவள் மனத்திறம் எத்தகையதாய் இருந்திருக்க வேண்டும்! ஆகவே அவள் 'திறம் கொள்' கோசலைதான்!

நிகழ்கால வினையாகப் பார்க்கும்பொழுது கோசலை பெற்ற குழந்தை யார்?

''ஒருபகல் உலகு எலாம் உதரத்துள் பொதித்து,
அருமறைக்கு உணர்வு அரும் அவனை அஞ்சனக்
கருமுகில் கொழுந்து எழில்காட்டும் சோதியை''

என்று குழந்தை பற்றி அடையாளம் காட்டுவார், கம்பர்!

அத்தகைய இறைவனே கோசலையின் வயிற்றில் குழந்தை யாகத் தோன்றுவதென்றால் அவன் என்ன மாதவம் செய்தவ ளாக இருக்க வேண்டும்! ஆக அவள் அருட் தவத்துத் 'திறம்கொள்' கோசலைதான்!

இனி, எதிர்கால நோக்கில் காண்போம்.

இராமனுக்கு முடிசூட்டுவது என்ற தயரதனின் எண்ணம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. செய்தியைக் கோசலை யும் அறிந்தாள்.

மழைக் குன்றம் அனையான் கவித்தனன் வரும்
என்று எதிர்பார்த்து நின்றாள்

அவனோ,

குழைக்கின்ற கவரி இன்றி, கொற்ற வெண் குடையும்
இன்றி
இழைக்கின்ற விதிமுன் செல்ல, தருமம் பின்
இரங்கி ஏக•

அவள் முன் சென்றான்!

சாதாரண மனம் படைத்தவளாயிருந்தால் அவள் ஏதோ என்னவோ என்று அங்கலாய்த்து அவனை வரவேற்ப திலேயே தடுமாறி இருப்பாள். ஆனால், காரணம் புரிய வில்லை யென்றாலும், கோசலை,

''புனைந்திலன் மௌலி, குஞ்சி மஞ்சனப்
புனித நீரால்
கனைந்திலன்; என்கொல்?'

என்று சற்றே ஐயப்பட்டு நின்ருள்! அவ்வாறு நின்றிருந்தவளின்' நளின பாதம், வளைந்த பொன் கழற்கால் வீரன் வணங்கினன், வணங்கினவனிடம் அதிர்ந்த உள்ளத்தோடு கேள்வி கேட்டாளா? 'குழைந்து வாழ்த்தி நினைந்தது என்? இடையூறு உண்டோ நெடுமுடி புனைதற்கு?' என்று சாதாரணமாகத் தான் கேட்டாள்:

'அவள் சாதாரணமாகத் தான் கேட்டாள்; படபடப்பு இல்லை என்பதை எப்படி உணர்கின்ருேம்?' என்ற ஐயம் ஏற்படத்தான் செய்யும்!

இராமன் அவளுக்குச் செப்பிய விடையைக் கேட்டபின், கோசலைத்தாய் சொல்லிய கருத்துரையின் மனேநிலை தெள்ளிதின் அதனைக் காட்டும்!

'நின்னுடைய அன்பு மகன், குற்றமற்ற குணமுடையஞன என் தம்பி பரதன்தான் முடிசூடிக் கொள்ளப் போகின்ருன்' என்று இராமன் கூறினன் யாரிடத்தில்? தயரத மன்னனின் ஆவற்படி ஆட்சிக்குப் பிள்ளையில்லையே என்ற ஏக்கத்தைத் தவிரத்து அந்த நல்லாட்சிப் பொறுப்பு எனும் திருவை—தன்னை—உற்றவளிடத்தில் கூறினன்! முதன் முதலில் பிறந்தவன் என்ற நெறிமுறையால் அவனுக்கு ஆட்சிப் பொறுப்பு உரியதாகும் என நினைந்திருந்தவளிடம் கூறினன்!

ஆனல், முத்த மனைவியென்றும் தன்னுடைய சிறப்பு நிலையையும் விட்டு, முறையின் வழி இராமனின் சிறப்பு நிலையையும் விட்டு அவள் கூறினள்.

''முறைமை அன்று என்பது ஒன்று உண்டு
மும்மையின்
நிறை குணத்தவன்; நின்னினும் நல்லனல்
குறைவு இலன்''

எனக் கூறிப் பரதன் பட்டம் பெறுவதற்கான தன் சம்மதி தைத் தெரிவித்தாள் என்றாள். அவளுடைய உளவியல் திறம் எத்தகைத்து என்பதை யுணர்ந்த கம்பர் ஏமாற்றங் களுக்கு ஆளாகாத 'திறம் கொள்' கோசலை என்றார்!

அவ்வாறென்றால், அடுத்து இராமன், தான் கானேக வேண்டுமென்பதுவும் அரசன் கட்டளை என்று சொன்ன பொழுது,

"அறம் எனக்கு இலையோ?' எனும்; ஆவி நைந்து
இறவு அடுத்தது என், தெய்வதங்காள்? எனும்;
பிற உரைப்பது என்? கன்று பிரிந்துழிக்
கறவை ஒப்ப கரைந்து கலங்கினாள்?"

என்று கம்பர் பாடுமளவிற்கு நைந்தாளே; அவள் திறம் என்னாயிற்று? என்று எண்ணத் தோன்றும்!

அதுதான் பிள்ளைப் பாசம் என்பது! பத்து மாதம் சுமந்து பெறாத தந்தை தயரதனே இராமன் கானேக வேண்டும் என்று கேட்ட கைகேயியின் வரத்தால் கலங்கி உயிர் சோர இருந்தான் என்றால் ஈன்ற தாய் அவனுடைய பிரிவிற்கு மனம் ஒப்ப ஏலுமா? அவ்வாறு எளிமையாக ஒப்புவதானால் அவள் தாய்மைப் பண்பு, பாசம், பிணைப்பு அற்றவள் ஆகிவிடுகின்றாளே! அதனால் தான் கம்பரும் கன்று பிரிந்திடக் கதறும் கறவைப் பசுப் போல் அவள் இருந் தாள் எனக் கூறிவிட்டார்.

அத்துயரத்தையும் அவள் தன் மனத் தகத்தே அடக்கிக் கொள்கின்றாள், இராமன் அவளைத் தேற்றி அவள் கணவ னுக்குத் துணையாக நாட்டிலேயே இருக்க வேண்டியதின் அவசியத்தையும் நியாயத்தையும் எடுத்துரைத்த பின்!

இனி, கைகேயிக்குக் கம்பர்கொடுத்த அடைமொழியைப் பார்ப்போம்.

'மாசு அறு கேகயன் மாது' குற்றமற்ற கேகய மன்னனுடைய மகளாகிய 'கைகேயி' எனக் கொள்வதா? கேகயனுடைய குற்றமற்ற மகள் 'கைகேயி' எனக் கொள்வதா?

தன் பெண்ணைத் தயரதனுக்குத் திருமணம் செய்வித்த பின் கேகய மன்னன் நம் காவியத்தில் எக்காட்சியிலும் பரதனுக்குத்தான் பட்டம் சூட்ட வேண்டும் என்று சொல்லும் காட்சியிலும்கூட வரவில்லை. அதனால், அவன் குற்றமற்றவன் என்ற நிலையிலும் சிறந்த 'நல்லவன்' என்ற நிலையினை எய்திவிடுகின்றான்.

கைகேயியைக் குற்றமற்றவள் எனக் குறிப்பிடுவானேன்? அவளுக்குக் குழந்தை பிறந்ததிலும் குற்ற அடிப்படை ஏதும் எவராலும் கற்பிக்க முடியாதே; அவளும் கற்புநெறி தவறாதவள் தானே!

'குற்றமற்ற கைகேயி' என இம்முறை மட்டுமின்றிப் பல தடவைகளிலும் கவிச் சக்கரவர்த்தி குறிப்பிடுகின்றார் என்றால் ஏதோ உள்நோக்கம் இருக்கிறது, என அனுமானிக்கின்றோம்.

இராமனுக்குப் பட்டாபிஷேகம் மறுநாள் காலையில் என்று மந்தரை கூறியும் மட்டில்லா மகிழ்ச்சி கொள்கின்றாள் மாசறு கேகயன் மாது. ஆனால், 'அடிமேல் அடி வைத்தால் அம்மியும் நகரும்' என்ற பாங்கில் கூனி மீண்டும் மீண்டும் பேசிப்பேசி அவளுடைய மனத்தைத் திரித்து விடுகின்றாள்! 'மாசு உறுகேகயன் மாது' என மாறி விடுகின்றாள்! தன் மகன் பரதனுக்கு நாட்டாட்சி வேண்டியதோடு நிற்கவில்லை; இராமனையே வனவாசம் செலுத்தும் வரத்தையும் கட்டாயப் படுத்தினாள்! இத்தகைய

விபரீதம் உண்டாக்கப் போகின்ருள் என்பதை முன்கூட்டியே சொல்லுமாப் போலே, அதற்கு அடிப்படைத் தேவையான தானீன்ற குழந்தைப் பாசம் முந்துறப் போகின்றது என்பதைக் காட்டி, குழந்தை பிறந்தவுடனேயே அந்த அடைமொழியைக் கையாண்டுள்ளார் என அனுமானத்தை உறுதிப் படுத்திக் கொள்கின்ருேம்.

'இளைய மென்கொடி!' சுமித்திரை, மூன்று மனைவியர்களும் இளையவள் என்பது கம்பர் வைத்துள்ள முறையால், சரிதான். ஆனல், அவள் 'மென்கொடி' என்று குறிப்பிடத் தக்க அளவிற்கு இளம் பிராயத்தினளா? இல்லையே! அப்படியானல், தவருன சொல்லாட்சியைக் கைக்கொள்வரா கவிச் சக்கரவர்த்தி!

தாவர வர்க்கங்களிலே, கொடிதான் பிற ஒன்றைத் தழுவிச் செல்லும் தன்மையுடையது. சுமித்திரை எப் பொழுதுமே கோசலையைத் தழுவியே நின்ருள்; அதனல் அவள் கொடிக்கு ஒப்பானள்.

மேலும், கொடியின் கிளைகள்தான்—அதாவது கொடி களினின்றும் தோன்றும் இளம் தளிர்கள்தான்—தாய்க் கொடியைப் போன்றே அருகிருக்கும் பிறவற்றைத் தழுவத் துடித்துத் தாவிப் பற்றிக் கொண்டு, அதனைவிடாது சுற்றிச் சுற்றி வளரும். அதுபோல், சுமித்திரைக் கொடியினின்றும் தோன்றிய இளந்தளிர்களாகிய இலக்குவனும், சத்ருக்னனும் இராமனையும், பரதனையும் சுற்றிச் சுற்றியே நின்றனர் வாழ்வு முழுதும் எனக் காண்கின்ருேம். ஆக, மெல்லிய கொடியின் தன்மை பெற்ற இளையவளாகிய சுமித்திரை, இளந்தளிர்கள் இருவரை ஈந்தாள் எனப் புகல வேண்டி "இளைய மென்கொடி" என்றே சுமித்திரையைப் பெயர் சொல்லாமலேயே குறிப்பிட்டுள்ளார் என உணர்ந்து வியக்கின்ருேம்!

# வறியவர் உண்டோ?

கோசல நாட்டின் வளமும், அதன் தலைநகரான அயோத்தி மாநகரின் செழுமையும் எல்லையற்றது. நாட்டு வளத்தைப் பாட வந்த கம்ப நாட்டாழ்வார்,

"வரம்பு எலாம் முத்தம்; தத்தும் மடைஎலாம் பணிலம்; மாநீர்க்
குரம்பு எலாம் செம்பொன்; மேதிக் குழி எலாம் கழுநீர்க் கொள்ளை;
பரம்பு எலாம் பவளம்; சாலிப் பரப்பு எலாம் அன்னம்; பாங்கர்க்
கரம்பு எலாம் செந்தேன்; சந்தக்கா எலாம் களிவண்டு ஈட்டம்"

எனப் பாடி முத்தும், சங்கும், செம்பொன்னும், பவளமும், செந்தேனும் மண்டிய சூழலுக்கு நம்மை அழைத்துச் சென்று அல்ல—இழுத்துச் சென்று செல்வச் செழிப்பில் மூழ்கடிப்பார்!

நகரத்தின் வளம் பாடும் போழ்து,

"கள்வார் இலாமைப் பொருள் காவலனும் இல்லை; யாதும்
கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை மாதோ"

"எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே,
இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை மாதோ"

என்றெல்லாம் பாடிச் செல்வச் செழிப்பினை வியந்து வியந்து நிற்பார் மாதோ!

"வண்மை இல்லை, ஓர் வறுமை இன்மையால்"

என்று பாடும் அளவிற்குப் பெருமை வாய்ந்த செல்வச் செழுமை சிறந்து விளங்கிய அந்த நாட்டின் மன்னர் மன்னனே வறியவரை அழைக்கின்றான்!

நாட்டில் மங்கையரின் மாண்பை,

"பெருந் தடங்கண் பிறை நுதலார்க்கு எலாம்,
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்,
வருந்தி வந்தவர்க்கு ஈதலும், வைகலும்
விருந்தும். அன்றி. விளைவன யாவையே?"

எனப் பாடுவார், கவிச் சக்கரவர்த்தி.

வறுமை இல்லாமையால் வள்ளன்மை இல்லை என்று பாடப் பெற்ற நாட்டில் வருந்தி வந்து ஈகை பெறுதர்க்கு எவரும் இரார்; எனவே 'வருந்தி வந்தவர் அயல் நாட்டவரே' என்பர் விளக்கம் தந்திடும் வித்தகர்கள்!

அப்படியானால் அந்த தயரத சக்கரவர்த்தி வறியவரை அழைப்பிப்பது அயல்நாட்டிலிருந்தா? இருக்க முடியாது! ஏனென்றால், அவன் தன் நாட்டில் பறையறைவித்து அல்லவா வறியவரை அழைக்கின்றான்!

தன் மனைவிமார் மூவரும் நான்கு மக்களை ஈன்றனர் என்ற செய்தியை அறிந்தான் அம்மன்னர் மன்னன்; அறிந்த அம்மாத்திரத்தே,

"இறை தவிர்ந்திடுக பார், யாண்டு ஓர்ஏழ் நிதி:
சிறை தரு சாலைதாள் நீக்கி, யாவையும்
முறைகெட, வறியவர் முந்து கொள்க எனு
அறைபறை என்றனன்—அரசர் கோமகன்"

இது என்னே முன்னுக்குப் பின் முரணாய்ப் பாடுகின்றாரா கவிச் சக்கரவர்த்தி! இல்லை!

''மங்கலம் என்ப மனைமாட்சி: மற்று அதன்
நன்கலம நன்மக்கட் பேறு''

என்றார் செந்நாப் போதாரும்!

தயரதன், மன்னன்தான் — மாமன்னன்தான்; மூன்று பட்டத்து அரசியரைக் கொண்ட மனைமாட்சி மங்கலம் பெற்றவன் தான்; ஆனால், நன்கலன் ஆகிய மக்கட்பேறு இன்றி மனம் வருந்தி யிருந்தான். ஆகவே,

''பெறுமவற்றுள் யாமறிவ, தில்லை அறிவறிந்த
மக்கட் பேறு அல்ல பிற''

என்பதற்கு இணங்க எல்லா வளங்களும் எல்லையின்றி கொழித்திருந்தும் தயரதனைப் பொறுத்த வரையில் மக்கட் செல்வ நோக்கில் வறியவனாகவே இருந்து வந்தான்; இப் பொழுது ஈரிரு குழவியரை அடைந்து வறுமை நீங்கினான். அவ்வாறு வறுமை நீங்கிய பெரு மகிழ்ச்சியில் மூழ்கினான்? மேற்கண்டவாறு அன்பின் ஆணையிட்டான்!

தான் மனத்தகத்தே வறியனாய் இருந்து மாறினமையால் நாட்டின் வளமையையும் மறந்து மகிழ்ச்சிப் பெருக்கில் நாட்டில் வரியவர் இருப்பதாக தவறான ஒரு மயக்கம் கொண்டு விட்டான்!

ஏழு பிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்'' அல்லவா!

ஆக, பிறப்பிற்கு ஓராண்டாய்க் கணக்கிட்டு ஓர் ஏழாண்டு வரி செலுத்த வேண்டா மென்று கூறினான் போலும்!

பறையறை செய்தி கேட்டு வறியவராய் எவரேனும் வந்தனரோ? இல்லையே! மாறாக மக்கள் எல்லாம் பேரு வகை பூத்து தம்முடைய நீள் நிதியை அல்லவா தூர்த்தனர்!

எனவே, இந்நோக்கில் பார்த்தால் கோசல நாட்டில் வறியவர் இல்லை யென்ற, கவிச் சக்கரவர்த்தியின் கற்பனையே உண்மை; தயரதனின் மயக்கக் கற்பனையில் வறியவர் தோன்றியது தவறு என்றே தெளிகின்றோம்!

இனி, பண்பின் சிறந்தோர்—தூயோர்—நாவில் வரும் சொற்கள்—அவை அவச் சொற்களாக இருப்பினும்—அனேக மாக உண்மையாகி நிகழ்ந்து விடுகின்றன என்ற அனுப பூர்வமான உண்மை நம் மனத்தே உறுத்தத் துவங்கு கின்றது!

இதுவரை நாட்டில் இல்லாத வறியவள் ஒருத்தி தோன்றினாள், தயரதன் வாய்ச்சொல் உண்மையாக்குவது போலே! அவள் செல்வச் செழிப்பினை உன்னத நிலையில் அனுபவித்துக் கொண்டிருப்பவள்தான்! ஆனாலும் நெஞ்சத் தளவில் அவளும் வறியவள் ஆகிவிட்டாள்! வறியவள் ஆக்கப்பட்டு விட்டாள்!

மந்தரை என்னும் கூனி மாண்பு மிகும் கைகேயிக்கு எவ்வளவோ விடம் ஏற்றினாள்; இராமன் பட்டத்திற்கு வந்துவிட்டால் கைகேயியின் செழுமை, வளமை எல்லாம் குன்றும், அதிகாரம்போம் என்று என்னென்னவோ கூறினாள். கைகேயி மனம் மாறவில்லை. மாறாக இராமன் பட்டம் சூட்டிக் கொள்வதை எண்ணி பூரிப்படைந்திருந்தாள், கூனி விட்டாளா?

''தூண்டும் இன்னலும், வறுமையும் தொடர்தரத்
துயரால்
ஈண்டு வந்து உனை இரந்தவர்க்கு, இருநிதி, அவளை
வேண்டி ஈதியோ? வெள்குதியோ? விம்மல் நோயால்
மாண்டு போதியோ? மறுத்தியோ? எங்ஙனம் வாழ்தி?

''சிந்தை என் செயத் திகைத்தனை? இனி சில நாளில்,
நம்தம் இன்மையும், எளிமையும், நிற்கொண்டு
தவிர்க்க,
உந்தை, உன்ஐ, உன் கிளைஞர், மற்று உன்குலத்து
உள்ளோர்
வந்து காண்பது உன் மாற்றவள் செல்வமோ?
மதியாய்,

இவ்வாறு 'ஏழையர் வந்து இறைஞ்சும் போழ்து, யாருடைய அனுமதியின் பேரில் தானம் செய்வாயே? உன்னைச் சேர்ந்தவர்கள் தங்களுடைய பொருளாதாரத் தொல்லையைப் போக்கிக் கொள்ள உன்னை அண்டி ஏது பலன்? என்றெல்லாம் கேட்டவுடனேயே கைகேயி கருத்து அழிந்தாள்! இராமன் அரசு ஏற்று, தான் ஏழ்மையில் முழுமையாய் வீழ்ந்துவிட்டது போன்ற கற்பனையில் வறியவள் ஆகிவிட்டாள்! அதனுல்தான்,

'இந்த நெடுஞ் சொல் அவ் ஏழை கூறுமுன்'

எனக் கம்பர்பாடுகின்ருர், கைகேயியைக் குறிப்பிட்டு.

அவ்வாறு வறியவளாகி விட்டவள், தயரதன் அன்று—குழந்தை பிறந்த அன்று—பறையறைவித்த வண்ணம், 'நிதி நிறை தரு சாலை தாள் நீக்கி' வேண்டியதை எடுத்துக் கொண்டாளா! தயரதனின் வார்த்தைக்கு வார்த்தை மெய்ப்பிப்பது போலல்லவா நடந்து விட்டது! அவள், தாள் திறவாமலே, யாவையும் கைப்பற்றிக் கொள்ள முடிவு கொண்டு விட்டாள்! தன் மகன் பரதனுக்கு முடிசூட்டி விட்டு இராமனைக் காட்டிற்கு அனுப்பும் வாயிலாக அதனைச் சாதித்துக் கொள்ளவும் உறுதிகொண்டு விட்டாள்!

'இது முறையா?' என்ருல், இல்லைத்தான்! பேரன் புனைத்துக் கோசலை வாயாலேயே, முறைமை என்று ஒன்று உண்டு. [அஃது மானுகின்றது] என வந்து விட்டதே!

ஆனல் தயரதன் சொல்லும் பொழுதே, 'முறைகெட' என்றிட்டானே! அதனல் அந்தக் கற்பனை வறியவளாகிய கைகேயியும் 'பதி சொல் தாண்டாப் பத்தினியாய்' முறை கெடவே அனுபவிக்கத் துணிந்து விட்டாள்!

ஆக, இப்பொழுது புரிந்து கொள்கின்ருேம், கோசல நாட்டில் சூழ்நிலை காரணமான வறியவரும் இருந்தனர் என்று. மேலும், 'தவறியும் பெரியவர்கள் வாயால் வேண்டாத சொற்கள் தோன்றக் கூடாது' என்று உணர் கின்ருேம்.

# ஆவியும் உடலமும்

பதிஞயிரம் பதிஞயிரம் ஆண்டு இல்வாழ்க்கைக்குப் பின், வேள்வி செய்த தன் விளைவாய்ப் பெற்ருன் பிள்ளைகளைப் பாராண்ட வேந்தர் வேந்தன் தயரதன்! ஒரு குழந்தையும் இன்றித் தவித்தவனுக்கு நான்கு குழந்தைகள் பிறந்தன! அந்த நால்வருள்ளும் நனியன்பு கொண்டான் மூத்த பிள்ளை இராமனிடத்தே! என்ருல் வருடக் கணக்கிலோ, மாதக் கணக்கிலோ, வாரக் கணக்கிலோ அவன் மூத்தவன் அல்ல; நாள் வேறுபாடுதான்.

என்ருலும், இராமன் பால் தயரதன் கொண்ட அன்பின் எல்லை--ஏன் பிறர் கொண்ட மரியாதை, அன்பு ஆகியவை கூட—கண்டால் அந்நால்வருள்ளும் இராமன் பற்பல ஆண்டுகள் வயதிற் பெரியவன் போன்ற ஒரு தோற்றம் நமக்கு ஏற்படுகின்றது! அவனுக்கு அடுத்து உடனடியாகப் பிறந்த பரதனை,

> 'ஆயிரம் இராமர் நின்கேள் ஆவரோ!'
> 'எண்ணில் கோடி இராமர் எனினும் நின்
> அருளுக்கு அருகு ஆவரோ!'

என்றெல்லாம் ஏத்திப் புகழ்ந்தாலும்கூட, அவன் இராமனினும் மேலோங்கியவஞய்—குறைந்தபட்சம் சம நிலையினஞய் —தோன்றக் காணேம்!

அத்தகைய இராமனே தனக்கு எல்லாமும் என்று எண்ணியிருந்தான் தயரதன்.

"காவியும் ஒளிர்தரு கமலமும் எனவே,
ஓவிய எழிலுடை ஒருவனை, அலது, ஓர்
ஆவியும் உடலமும் இலது என அருளின்
வேலினன்—உலகுடை வேந்தர் தம் வேந்தன்"

என்று கம்பர் வர்ணிப்பார்!

"குழந்தையை 'உயிருக்கு உயிராய்' நேசித்தான் வளர்த்தான் என்று கூறுவது உலக இயல்பு. காதலர் உயிர் ஒன்றி, உடலமும் ஒன்றினர்" என்பதுவும் உலகியல் உண்மை. அவர்கள் பிணைப்பில்கூட காணக் கூடுவது ஈருடல் ஒருயிராய் இணைந்திருக்கும் தன்மைதான்; காதலன் உடல் காதலியின் உடலாகவும், காதலியின் உடல் காதலனின் உடலாகவும் நினைக்கப் படுவது இல்லை; அதற்கு இயற்கையமைப்புகளும் ஒத்துவரா!

அப்படியிருக்கத் தயரதன் மட்டும், இராமனே தன் உயிர் என்று வாழ்ந்தான் என்பதில் ஒரு நியதி இருக்க, அவனே 'உடலமும்' என்று எப்படி எண்ணியிருந்தான்? அப்படி அவன் நினைந்தது தவறோ, சரியோ, அதற்கேற்ப நிகழ்ச்சிகள் ஏற்பட்டனவா என்று ஆராய்ந்தால் அதன் உண்மை விளங்கும்!

விசுவாமித்திரர், வேள்வி காப்பதற்கென்று இராமனைத் தன்னுடன் அனுப்ப வேண்டினார். அதனைக் காதால் கேட்டதும்,

"ஆர் உயிர் நின்று ஊசலாட, கண் இலான் பெற்று இழந்தான் என உழந்தான் கடும் துயரம்" தயரதன். தன் உயிராகவே இராமனை நினைந்திருந்ததால் அவ் வுயிராகியவன் செல்வதும் வருவதுமாகிய செயல் நிகழப் போவது மனக் கண் முன் நிழலாடியது; ஆகவே, 'தன் ஆர் உயிர் அங்கே [அரண்மனையிலே அப்போழ்து] நின்றிருக்கவும் ஊசலாடுவது போன்று திகைத்தான் தயரதன்.

இறுதியில், விசுவாமித்திரருடன் இராமன் ஏகிடவே தயரதன் இறந்து பட்டானு! இராமன்தான் அவனுடைய உயிர் ஆயிற்றே! வசிட்டன் அறிவுரை கேட்டு தயரதன் தானுகத் தந்திட்டான் இராம இலக்குவரை.

''எந்தை! தந்தனென், இயைந்த செய்க!'' என்ருன் தயரதன், விசுவாமித்திரரிடம். அவரும்,

''கொடுத்த மைந்தரைக் கொண்டு நீங்கினுன்''

எனக் காட்டுவார் கம்பர்!

அதனுல் தயரதன் இறந்து பட்டானில்லை! என்ருலும், இராமன் பிரிவினுல் தயரதன் உயிர் பிரிந்த மயக்க நிலையில் தான் இருந்து கொண்டிருந்தான்! ஆதாரம் எங்கே? இதோ!

''காவியும், குவளையும், கடிகொள் காயாவும் ஒத்து
ஒவியம் சுவை கெடப் பொலிவது ஓர் உருவொடே
தேவரும் தொழுகழல் சிறுவன், முன் பிரிவது ஓர்
ஆவி வந்தென்ன வந்து, அரசன் மாடு அணுகினுன்.''

மிதிலைக்குத் தயரதன் தன்னுடைய படைசூழ வந்தடைந் தான்; வந்த தந்தையை இராமன் அணுகினுன்.

தாற்காலிகமாக தயரதனைவிட்டுப் பிரிந்திருந்த இராம னுகிய உயிர் மீண்டது! ஆனுல் தயரதன் தன் உயிர் மட்டும் மீண்டதாகக் கருதவில்லை; தன் உடலமும் நீங்கியிருந்து இப் போழ்து மீண்டதாகத்தான் உணர்ந்தான்!

''அனிகம் வந்து அடி தொழ, கடிது சென்று அரசர் கோன்
இனிய பைங் கடில் பணிந்து எழுதலும், தழுவினுன்;
மனு எனும் தகையன் மார்பிடை மறைந்தன மலைத்
தனி நெடுஞ்சிலை இறத் தவழ் தடங்கிரிகளே''

மனு என்போன் சூரிய குலத்தில் தோன்றி மறைந்தவன்; அம் மறைந்தவன் போலே தன்னுடையஉடலம் பற்றிய சிந்தையும் உணர்வும் இன்றியிருந்தான் தயரதன் எனக் குறிப்பிடுவதற்காக 'மனுஎனும் தகையன்' எனச் சொற்றொடர் பெய்தார் போலும், கம்பர்! [மனுவினைப் போன்று புகழ் கொள் தகையனான தயரதன்' எனப் பொருள் கொள்வார் கொள்க!]

அந்த, தன்னுடல் உணர்வற்ற நிலையில் இருந்தவன் இராமனைத் தழுவினான். எப்படி? இராமனின் மலைத் தனி நெடுஞ்சிலைத் தடங்கிரி தயரதனின் மார்பகத்தே ஒன்றி ஒடுங்கி மறைந்திடும் பாங்கில் தழுவினான்!

ஆக, இராமனே தன் உயிர் என்று மட்டும் அல்ல, உடலமும் என்றிருந்தான் தயரதன் என்பது உண்மையே!

சுதந்திரனோடு இராம இலக்குவரும் சீதையும் கானகம் நோக்கிச் சென்றதால் தயரதன் தன் உயிர் நீங்கியதுபோல் மயக்கமாய்க் கிடந்தான். சுமந்திரன் வந்ததும் சற்று தெளிந்து "நம்பி சேயனோ? அணியனோ?" என்று கேட்டான் அத் தேர்வலான்.

"வேய் உயர் கானம், தானும், தம்பியும், மிதிலைப்பொன்னும் போயினன்"

என்றான்.

இப்பொழுதுதான், தயரதன் தன் உயிரும் உடலமும் முழுமையாய் நீங்கியதாய் உணர்ந்தான்.

"என்ற போழ்தத்தே ஆவி போனான்" என்பார் கம்பர்.

ஆம், தயரதனின் உயிரும் உடலமும் ஆகி நின்ற இராமன் அங்கே இல்லாத போழ்து அவ் ஆவி எங்கே நிற்க முடியும்? எனவே ஆவி போயினான்!

# ஆதி அரசன்!

தயரதன் தன் மக்கள் நால்வரும் செவ்வனே வளர்ந்து வருகின்றனர். ஊர் மக்களோடு அன்பொழுகத் தொடர்பு கொள்கின்றனர். வழியில் எதிர்ப்படும் குடிமக்களின் நலம் பற்றி இராமன் உசாவுகின்றான்.

> "எதுவினை? இடர்இலை? இனிது நம்மனையும்?
> மதிதரு குமரரும் வலியர்கொல்?"

என்றெல்லாம் மலர்ந்த முகத்தோடு கருணை பொங்க விசாரிக்கின்றான்.

குடிமக்கள் கூறும் பதில்?

> "அஃது, 'ஐய! நினை எமது அரசு எனஉடையேம்;
> இஃது ஒரு பொருள் அல; எமது உயிருடன்ஏழ்
> மகிதலம் முழுதையும் உறுக, இ மலரோன்
> உரு பகல் அளவு' என உரை நனிபுகல்வார்"

என எடுத்து இயம்புகின்றார், கம்பர்!

இராமன் கல்வி கேள்வி பயின்று வரும் போழ்தே மக்கள் முடிவு செய்து விட்டனர், அவன்தான் முறைமையால் தங்கள் மன்னன் என்று உண்மையில் பார்க்கப் போனால், தயரத சக்கரவர்த்திக்கே அதுபற்றிய சிந்தனை அப்போழ்து எழவே இல்லை! இராமன் மிதிலை சென்று சீதையைத் திருமணம் செய்து திரும்பி வந்து சின்னாள் கழிந்த பின்னரே, இராமனை மன்னன் ஆக்கும் எண்ணம் தோன்றிற்று, அதுவும் அவனுக்கு ராஜ்யபாரம் அலுத்துப் போய்விட்டதனாலே!

அப்படியானால், குடிமக்கள் 'எமது அரசு என உடையேம்' எனக் கூறியது முகஸ்துதியா?

அல்லவே அல்ல! அதன் உண்மைத் தன்மையைக் கம்பர் எப்படி விளக்கிக் காட்டுகின்றார் எனக் காண்போம்.

இராமனுக்கு முடிசூட்டப் போகின்றனர் என்பது உறுதியாகி, ஊர் முழுதும், உலகம் முழுதும் தெரிந்துவிட்டது. மக்கள் எல்லோரும் பெரு மகிழ்ச்சியில் ஆழ்ந்தனர்.

ஆனால், திடீரென, இராமன் காட்டிற்குப் போக வேண்டும் என்ற அவலச் செய்தி அனைவர் செவிகளிலும் பட்டது! எல்லோரும் துயர் உற்றனர்; அழுதனர், அலறினர். பற்பல வகையாகப் பேசிக் கொண்டனர்.

அவ்வாறு பேசிக் கொண்ட பொழுது, "ஆதி அரசன், அருங்கேகயன், மகள்மேல் காதல் முதிர, கருத்து அழிந்தான் ஆம்" என்று கூறிக் கொள்கின்றனர்!

'ஆதி அரசன்' யார்? தயரத மன்னன்! அவன் ஆட்சிப் பீடத்தில் இருக்கும் பொழுதே அவனை முன்னாள் மன்னன் எனும் பொருள்படக் குறிப்பிட்டது ஏனோ? என்று இராமனை அவர்கள் மானசீகமாக, 'எமது அரசு' என முடிவெடுத்துக் கொண்டனரோ அன்று முதலே அவர்களைப் பொறுத்தவரை தயரதன் தங்களது முன்னாள் மன்னனாகவேத் தோன்றத் தொடங்கி விட்டான்', இராமனே அனைவர்க்கும் அரசனும் ஆகிவிட்டான்!

கோசலை, சுமித்திரை, வசிட்டர் முதலியோரிடம் சொல்லிக் கொண்டு, இராமன் கான் ஏகப் புறப்பட்டு விட்டான். அது தெரிந்து மக்கள் கொண்ட துயரத்தைப் பற்றிக் கம்பர் வர்ணிக்கின்றார்!

"விம்மிய பேர் உயிர் மீண்டிலாமை கொல்?-
செம்மல்தன் தாதையின் சிலவர் முந்தினார்"

எனக் குறிப்பிடுகின்றார். ஆம், மக்கள் அனைவரும் 'எமது உயிர் உறுக' என, அவனது இளம் பருவத்திலேயே கூறினர் அல்லவா? அதன் விளைவின் உண்மையை இங்கு உணர்த்துகின்றார்!

அது மட்டும் அல்ல. 'தாதையின் சிலவர் முந்தினர்' என்ற தொடரை இந்தச் சூழலில் பெய்து, 'இராமனின் பிரிவால் தயரதன் இறப்பது உறுதி; அவனுடைய உயிர் வேகமாகத் துடித்துக் கொண்டிருக்கின்றது, நீங்குவதற்காக என்பதைக் கம்பர் வேகமாக முன்கூட்டியே நமக்கு அறிவித்து விடுகின்றார்! அஃது உண்மை என்பதை, 'இராமன் நாட்டிற்குத் திரும்பி வரவில்லை' என சுமந்திரன் வாயிலாகத் தெரிந்த அக்கணமே தயரதனின் உயிர் நீங்கிற்று என்பதால் அறிகின்றோம்!

# கண் இலான் பெற்று இழந்தான்

தயரதன் சபைக்கு விசுவாமித்திர மாமுனிவர் வந்தார். சக்கரவர்த்தியைப் போற்றிப் புகழ்ந்து ஆசி கூறினர்.

மன்னர் மன்னன் தன்னால் ஆகவேண்டியது என்னவோ என முனிவரைப் பணிந்து கேட்டான். 'யானும் பிற முனிவர்களும் செய்யும் வேள்விக்கு இடையூருக அரக்கர் தொல்லைகள் இயற்றுகின்றனர். அவர்களைத் தவிர்த்து வேள்வி காக்கும் பொருட்டு உன் புதல்வர்கள் நால்வருள் கரிய செம்மல் ஒருவனை என்னுடன் அனுப்புக' என்ருர்.

இதனைக் கேட்டதும் தயரதன், 'கண் இலான் பெற்று இழந்தான்' எனக் கடுந்துயரால் துடித்தான் எனக் கம்பர் படம் பிடிக்கின்ருர்!

இத்தொடர் காட்டும் விளக்கம் என்ன? தயரதன், தான் பெற்ற புதல்வர்கள் நால்வருள்ளும் இராமனிடம் அதிக பாசம் கொண்டான். அவனே தன் உயிர் என வாழ்ந் திருந்தான். எனவே, விசுவாமித்திரருடன் இராமனை அனுப்புவதால் ஏற்படக் கூடிய பிரிவினை நினைந்து பெருந் துயர் கொண்டான்.

அத்துயரின் எல்லையைக் காட்ட முயல்வதே மேலே காட்டப் பெற்றுள்ள தொடர்! அந்த எல்லை எது?

ஒரு பிறவிக் குருடன்; துணையின்றி எதனையும் உணர்ந்து கொள்ளும்—அறிந்து கொள்ளும்—சக்தியற்றவன். தனக்குக்

கண் இலாமையால் காரிருள் உலகில் வாழ்வதில் விரக்தி கொண்டு வெட்டவெளியில் உட்கார்ந்திருந்தான். திடீரென இடியும் மின்னலும் கூடிய காலநிலை மாற்றம் ஏற்பட்டது. அப்போழ்து உண்டான ஒரு மின்னல் கீற்று மூடியிருந்த அவனுடைய கண் இமைகளுக்கு ஒரு சக்தியை ஈந்தது! கதவுகள் பெருங்காற்றால் திறந்து கொள்வதுபோல் அக்கண்ணிமைகள் திறந்து கொண்டன! கண் பார்வையால் இயற்கையை—ஏன், அருகேயிருந்த செயற்கைப் பொருள் களையும் கூட அனுபவிக்க வாய்ப்பு ஏற்பட்டது! பேருவகை பூத்தான்; உலகம் முழுதும் காணத் துடித்தான். அவ்வளவு தான்! மறுபடியும் ஒரு பேரொளி மின்னற் கீற்று! அவ் வாய்ப்பினை அகற்றி கண் பார்வையை முழுதுமாய்ப் பறித்துக் கொண்டது!

ஒருவிநாடி நேரத்தில் அக்கண் இழந்தவன் பார்வை பெற்று உடனடியாக அப்பார்வை போய்விட்டது என்றால், அவனுடைய உள்ளம் எத்துணை ஏமாற்றம் பெற்றிருக்கும்! எத்துணை அளவு அவன் உள்ளம் துடித்திருக்கும்—நொந் திருக்கும்! எடுத்துரைக்க ஏலுமோ? அந்த அளவிற்குத் தயரதன் துடித்து, ஏமாந்து வேதனைப்பட்டான் என்பது ஒரு விளக்கம்!

பல்லாயிர ஆண்டுகள் பிள்ளைகள் இன்றி இருந்தான்; வேள்வியின் பயனாய்ப் பிள்ளை பிறந்தான்; அடுத்து முனிவர் அவனைக் கொண்டு செல்ல வந்துள்ளார்; அதனால் அவ்விளக்கம் பொருத்தமானதுதான். ஆனால், சாதாரண மானதே!

ஆனால், இத்தகைய இழப்பிற்கு நிகரான இழப்பும் அதனால் உண்டாகும் எல்லையற்ற மனத் துயரும் ஊட்ட வல்ல உவமை' வேறு இல்லையோ எனில் உண்டு, ஆயின், இனியொரு சம்பவத்தையும் முன்கூட்டியே தெரிவிக்க

வல்லது இத்தொடர் என்பதால் கம்பர் இதனைக் கையாண்டுள்ளார்!

முன்னொரு காலத்து கண்ணிழந்த தம்பதியர் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கு யார் துணை? திக்கற்றவர்க்கு தெய்வமே துணையென்பது முதுரையேயன்றி வாழ்க்கைக்குப் பொருந்துகின்றதா என்பது ஐயமே! இந்த ஐயத்திற்கு மாறாகவே அமைந்தது அத்தம்பதியர் வாழ்க்கை. ஆண்டவன் அருளினால் அவர்களுக்கு ஒரு மகன் பிறந்தான். பார்வையின் றெனினும் அன்புப் பார்வைமிகு பிள்ளை பிறந்தான்; அவனை எப்படியோ வளர்த்தனர் ஒரு குறிப்பிட்ட வயது வரை.

உலகியல் அறிவு தோன்றியது அப்பிள்ளைக்கு. 'அன்னை யும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்னும் முதுரையை உணர்ந்தான். தன்னை இத்தனை நாட்கள், பார்வையின்றியும், வளர்த்த பெற்றோரைத் தான் வளர்க்க வேண்டும் என்ற கடமையுணர்வு தோன்றியது.

அது முதல் பெற்றோர்க்கு உரிய சகல பணிகளையும் அவனே ஆற்றி வந்தான். அத்தகைய அருமந்தப் புதல்வனைப் பெற்ற அந்தகத் தந்தை புறக்கண் இன்பம் இன்றேனும் அகக்கண் இன்பம் பெற்றான்!

> "மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
> என்னோற்றான் கொல்எனும் சொல்"

என்ற திருக்குறட்பாவிற் கேற்ப அமைந்தான் அப்பிள்ளை. அத்தகைய பிள்ளையை ஒருநாள் திடீரெனப் பெற்றோர் இழக்க நேர்ந்தது. அவர்கள் பட்டபாடு—பெற்ற மனத் துயரின் விரிவு—சொல்லும் தரத்ததோ? அவனை இழந்த ஏக்கத்தால் உயிரே நீங்கியது என்றால் அவர்கள் பெற்ற துயரின் எல்லையைச் சொல்ல ஏலுமோ?

இந்த எல்லையற்ற துயர் பெற்றான், தயரதன்! எப்படி அவனுக்கு அந்த எல்லையின் அனுபவம் ஏற்பட்டது?

கண் பார்வையற்ற பெற்ருேரிடமிருந்து பிள்ளை நீங்கும் காரியத்தைச் செய்தவனே அந்த தயரதன்தானே! அக்கண்ணல்லா தந்தை, தான் பெற்ற மகனை இழந்த நிலையில் பட்ட வேதனையை நேரில் கண்டவனுயிற்றே!

ஒருநாள் கானகத்தில் வேட்டையாடச் சென்றிருந்தான் தயரதன். வெகு தொலைவில் ஒரு குளத்திலிருந்து நீரொலி கேட்டது. யானை குளத்தில் நீர் பருகுவதாய் எண்ணினுன் தயரதன். ஒலி வரும் இடம்நோக்கி அம்பு எய்தினுன், குளம் கண்ணிற்குப் படும் முன்பே! ஆனுல், அம்பு பட்டு அலறி வீழ்ந்தான் ஒரு சிறுவன்!

தயரதவன் மயங்கினுன்; தன் தவற்றை உணர்ந்தான்! பலன்? அச்சிறுவன் மாண்டான். தயரதன், அச்சிறுவன் உயிர் நீங்கும் முன்பே அவனுடைய வரலாற்றைக் கேட்டறிந்தான்.

தாகம் கொண்டிருக்கும் தன் தாய் தந்தையர்க்குத் தண்ணீர் கொண்டு செல்ல ஒரு பாத்திரத்தைத் தண்ணீரில் முக்கியதும் ஏற்பட்ட ஒலியைத் தவருகத் தயரதன் கற்பனை செய்ததை உணர்ந்தான்! எனவே, அப்பார்வை இழந்த வர்க்குத் தானே தண்ணீர் எடுத்தேகினுன்; அவர்களிடத்து, நடந்ததை விளக்கி மன்னிப்புக் கோரினுன் மன்னிப்பார் களா?

பெற்ற பிள்ளையை இழந்தவன் துடித்தான். அப்பொழுது அவன் பெற்ற துயரை எப்படி அளவிட முடியும்? அது மேலும் பெருகா வண்ணம் அவன் தயரதனுக்குச் சாபம் இட்டான்.

'கண் இலான் ஆகிய நான் நல்ல பிள்ளையைப் பெற்றேன்; பெற்று இழந்தேன்; இனி உலகில் வாழ்வேது? தண்ணீரும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். நான் பெற்று, இழந்து உழந்து துடிப்பதைப் போல நீயும் பெற்று இழந்து உழல்வாயாக' எனச் சபித்தான்!

இந்தச் சாபம் பற்றிக் கோசலையிடம் கூட சொல்லாதிருந்தான் தயரதன். பதினாயிரம் ஆண்டுகள் கணக்கில், மூன்று மனைவியருள் ஒருத்தியின் வாயிலாகவும்கூட பிள்ளைப் பேறு இன்றி வருந்திய தயரதனுக்கு இச்சாபம் தெம்பூட்டியது. தான் பிரிவுத் துயரால் வருந்த நேரிடுவதற்காகவாகிலும் தனக்குக் குழந்தை பிறக்குமே என்ற மகிழ்ச்சியுடன் இருந்தான்!

அம்மகிழ்ச்சி நீங்கி, சாபத்தின் விளைவை அனுபவிக்கும் காலம் வந்தது போலுமென, அக்கண் இலான் பெற்று, இழந்த, ஞான்று பட்ட வேதனையைப் பட்டான் தயரதன்!

தயரதன் வாயிலாக, பின்னுளில் இராமன் காடேகும் கட்டத்தில், கோசலைக்குக் கூறும் இந்நிகழ்ச்சியை நமக்கு முன்கூட்டிக் காட்டுதற்கே இரு பொருள் இத்தொடரைக் கையாண்டுள்ளார் கவிச் சக்கரவர்த்தி என்று உணரும் போழ்து நாம் கண்ணை அகல விரிக்கின்றோம் வியப்பின் மேலீட்டில்!

# திருவின் கேள்வன்!

தாம் செய்யும் வேள்வியை அரக்கர்களிடமிருந்து காக்க இராமனைத் தம்முடன் அனுப்பும்படிக் கோரினார், விசுவாமித்திரர், தயரதனிடம். அவனோ இராமனைப் பிரிய மனமின்றி, தானே வருவதாகக் கூறி நின்றான். முனிவர் சினந்து திரும்பிச் செல்ல முற்பட்டார். குல குருவாகிய வசிட்டர் தடுத்தார். தயரதனிடம், இராமனை அனுப்பும்படி உரைத்தார்.

குருவின் வாசகத்தை மனத்தே கொண்டு, மன்னர் மன்னன் அழைப்பித்தான்! யாரை? 'இராமனைக் கொணர்மின்' என்றானா? திருவின் கேள்வனைக் கொணர்மின்' என்றான்!

'கேள்வன்' எனும் சொல், 'தலைவன், நாயகன், தோழன், அன்பன், ஐயன், கணவன்' எனும் பல்பொருள் ஒரு சொல்.

'திரு' என்பது, அழகு திருமகள், செல்வம், தெய்வீகம், மேன்மை, சிறப்பு, காந்தி, பொலிவு, பாக்கியம், தெய்வத் தன்மை போன்ற பல்பொருள் ஒரு சொல்.

இவ்விரு சொற் பொருள்களுள்ளும் 'கணவன் திருமகள்' என்ற சொற்களையும் சற்றே நீக்கி வைப்போம். பிறபொருள்களின் இணைப்புக்களை வைத்துப் பார்ப்போம். இராமனுக்கு 'அழகுத் தலைவன், செல்வ நாயகன், தெய்வத் தன்மை ஐயன்' என்பன போன்ற இணைப்புத் தொடர்கள் அனைத்தும் ஏற்புடையனவாகவே உள்ளன.

ஆனால், கம்பர் 'கேள்வன் 'என்ற சொல்லிற்குக்'கணவன்" என்ற பொருளேயே அழுத்தமாகப் பிற இடங்களில் ஏற்றுள்ளார்.

தயரதனிடம் கைகேயி கேட்ட இரு வரங்களைக் குறிப்பிடும்பொழுது, 'சீதை கேள்வன் ஒன்றால் போய் வனம் ஆள்வது' என்பார்.

அந்த 'சீதை கேள்வனாக இராமன் ஆகப் போகின்றான்; அதற்கு முன்னேற்பாடாகத் தான் விசுவாமித்திரர் இராமனை வேள்வி காக்க என்னும் காரணம் காட்டி அழைத்துச் செல்கின்றார்' என்பதை நமக்கு முன்கூட்டி உணர்த்தவே 'திருவின் கேள்வன்' எனும் தொடரைக் கம்பர் கையாண்டுள்ளார்!

இதனை எப்படித் தெளிகின்றோம்?

'தயரதன், இராமனை விசுவாமித்திரருடன் அனுப்பாமல் தானே வருவதாகக் கூறினான்; விசுவாமித்திரர் சினந்து திரும்பினார்; வசிட்டர் இடை புகுந்தார்' என்றெல்லாம் முன்னே கண்டோம் அல்லவா? அது போழ்து, வசிட்டர், கறுத்தமா முனி கருத்தை உன்னி' பேசலுற்றார் என்பார், கம்பர்!

விசுவாமித்திரர் தயரதனிடம் வந்த காரணம், அவரிடையே நிகழ்ந்த பேச்சுக்கள் அனைத்தும் நமக்கு வெளிப்படையாகவே தெரிகின்றதே. அப்படியிருக்க வசிட்ட முனிவர் மட்டும் என்ன கருத்தை உன்னிப் பார்த்தார்?

அங்கேதான் தேவ ரகசியம் உள்ளது. முக்காலமும் உணரவல்ல அந்த வசிட்ட மாமுனிவர், வரப்போகும் சீதா இராமர் திருமணத்தை ஞானக் கண்ணால் உணர்ந்தார். எனவே, அதுதான் விசுவாமித்திரனின் கருத்து என்பதைச் சிந்தித்துப் புரிந்து கொண்டார்.

தனக்குப் பிள்ளைப் பேறு இல்லையே என்று ஏங்கித் தவித்து இயம்பினன், தயரதன். அப்பொழுது வசிட்டர் தான், 'பிள்ளைப் பேற்று வேள்வி நடத்தினால் புதல்வர் தோன்றுவர்' என்றார். எந்த ஆதாரத்தைக் கொண்டு இயம்பினார்?

தேவர் குழாம் திருமாலினிடம் அரக்கரை அடக்கும்படி வேண்டி நின்றதையும், திருமால் தான் தயரத புத்திரனாக அவதரிப்பதாகக் கூறியதையும், பிறர் எல்லோரும் அவருக்கு எவ்வாறு துணை புரிதல் வேண்டும் என்று வகுத்த வழிகளையும் வசிட்டர் தமது ஞானக் கண்ணால் கண்டார்; அதன் விளைவாகவே அரசனுக்கு அவ்வாறு ஆசியுரை வழங்கினார் என்பதை நமக்குக் கம்பர் முன்னமேயே படம் பிடித்துக் காட்டியுள்ளார் அன்றோ! அத்தகைய ஞானிக்கு சீதா—இராமர் திருமணம் மனக்கண் முன்தோன்றியதில் வியப்பு என்ன?

இனி, 'திரு' எனும் சொல் 'சீதையை' எப்படிச் சாரும் எனக் காண்போம். இலக்குமிதேவியே சீதையாய்த் தோன்றுவது என்பது அவதாரத் திட்டத்தில் வெளிப்படையாக இடம் பெறவில்லை என்பது உண்மைதான்! ஆனால் அந்தக் காட்சியில் திருமால் கருடன்மேல் வந்த அழகை வர்ணிக்கும் பொழுது,

'ஏந்து அலர்த் திருவொடும் பொலிய'

என்று பாடும் கம்பர், பின்னும் தேவர்கள் திருமாலை விளித்ததை,

'திருவின் நாயக'

என்னும் சொற்றொடராலேயேக் குறிப்பிடுகின்றார்!

இலக்குமிதேவியே சீதையாய் அவதரித்திருந்தாள் என்பதைச் சுந்தர காண்டத்திலும் உறுதிப்படுத்துவார், கம்பர்!

இலங்கையில் அனுமன் சீதையைத் தேடிச் செல்கின்றான் அசோக வனத்தில் சோகமாய் அமர்ந்திருந்த அணங்கைக் கண்டான். அரக்கியர் நடுவே இருப்பவள் சீதையே என அனுமன் அனுமானித்துத் தெளிகின்றான். தனது தெளிவதைத் தெரிவிக்குங்கால்,

'தேவனே அவன்; இவள் கமலச் செல்வியே'

எனக் கூறுகின்றான்; இலக்குமியே சீதை யென்பதையும் திருமாலே இராமன் என்பதையும் உறுதிப்படுத்துகின்றான்! ஏன்? அவனும் இராவண வதத்தில் இராமனுக்குத் துணை நிற்க வந்த ஓர் அவதாரன் அன்றோ!

மண்ணுலகில் அவதாரம் செய்யாத தேவர்கள் முன்னமேயே இராமனையும் சீதையையும், திருமால் இலக்குமி என மறைமுகமாய் உறுதிப்படுத்தியுள்ளனர்!

அவர்கள் திருமாலுக்கும் இலக்குமிக்கும் நடந்த திருமணத்தைக் கண்டு களித்தவர்கள்.

இப்பொழுது மிதிலையில் ஒரு திருமணத்தைக் கண்டனர். ஆம், இராமர்—சீதை திருமணம்தான்! அஃது அவர்களின் அவதார நிலையால் ஏற்பட்ட ஒரு நடிப்புத் திருமணம் தானே!

இந்த நடிப்புத் திருமணம், முன்னைய, முறையான திருமணத்தைக் காட்டிலும் சிறப்பாக அமைந்தது என்று அத்தேவர்கள் வியந்தனர்!

'துன்று இருங் கருங்கடல் துவைப்பத் தோன்றிய
மன்றல் அம் கோதையாள் மாலைசூட்டிய
அன்றினும், இன்று உடைத்து அழகு என்றார் அரோ'

ஆக, தான் அறியாதிருந்தும் தன்னையும் அறியாமல் தயரதன், இராமனை இலக்குமியின் கணவன்—சீதையின் நாயகன்—எனக் குறிப்பிட்டான். 'திருவின் கேள்வன்' என்ற தொடரால் என்று அறிந்து பேருவகை பூக்கின்றோம்!

# தந்தை நீ, தனித்தாயும் நீ!

வசிட்டன் அறிவுறுத்திய பின் விசுவாமித்திர மாமுனி வருடன் இராமனை அனுப்புவதாக முடிவு செய்தான் தயரதன். இராமனை வரவழைத்தான். வந்ததும் அவனையும் இலக்குவனையும் விசுவாமித்திரரிடத்து ஒப்படைத்தான். அப்போது முனிவரிடம் தயரதன் 'தந்தை நீ, தனித்தாயும் நீ இவர்க்கு!' என்றான்.

உலகியல் நோக்கில் மேலெழுந்த வாரியாகக் காணுங் கால், தயரதன் பிள்ளைகளைப் பிரியும் போழ்து, எல்லோரும் சொல்வதைப்போல் 'இவர்களுக்குத் தாய் தந்தை குரு அனைத்தும் தாங்களே' என்று சொல்வதைப்போல் தோன்றும்.

ஆனால், நுணுக்கப் பொருள் ஒன்றையும் இத்தொடரில் வைத்துள்ளார் கம்பர்! அது இராமனின் திருமணம் நிச்சயம் ஆகும் சூழ்நிலையைச் சிந்தித்துப் பார்த்தால் தெற்றென விளங்கும்!

விசுவாமித்திர முனிவருடன் அனுப்புவதற்கு இராமனை அழைக்க விழைந்த தயரதன் அவனைத் 'திருவின் கேள்வன்" என்று குறிப்பிட்டான் என்றும், அதன் உட்பொருள் என்ன வென்றும், 'திருவின் கேள்வன்' என்ற தலைப்புக் கட்டுரையில் ஆய்ந்துள்ளோம்.

அத்தொடரின் தொடர்ச்சியாகவே இத் தொடரினையும் கவிச் சக்கரவர்த்தி கையாண்டுள்ளார். அப்படியானால் இராமனின் திருமணத்திற்கும் இத்தொடருக்கும் ஏதோ இணைப்பு இருக்க வேண்டும் போலும்!

முனிவரின் வேள்வி முடிந்த பின், பிள்ளைகள் இருவரையும் அழைத்துக் கொண்டு மிதிலைக்குச் சென்றார். அங்கு அனைவரும் அறிய இராமனின் குலமுறை எடுத்து விளக்கப் பெற்றது.

இராமன் வில்லை நாணேற்றினால் தன் மனத்துயர் நீங்கும் எனச் சனகன் கூறினான். சதானந்த முனிவன் வில்லின் வரலாற்றை உரைத்தான்.

அவ்வில்லினை நாணேற்றி வளைத்தால் கிடைக்கக்கூடிய பரிசு சீதையுடன் திருமணம் என்பது எல்லோரும் அறிந்ததே. விசுவாமித்திரரும் அறிந்ததே.

அந்த விசுவாமித்திரருக்கு இராமனின் வில்லாற்றலில் முழு நம்பிக்கையுண்டு. இராமன் அவ்வில்லை நாணேற்றி வெற்றி கண்டிடுவான் என்பதில் ஐயமே இல்லை. அப்படி யிருந்தும், தன் முகக் குறிப்பாலேயே இராமனை வில்லெடுக்க அனுமதி வழங்கி விட்டாரே!

ஓர் ஆண்பிள்ளைக்கே யானாலும் திருமணத்தை அவன் தாய் தந்தையர் இருந்தல்லவா நிச்சயம் செய்ய வேண்டும்! இப்பொழுது இராமனுக்கு அவன் வென்றியால் திருமணம் நிச்சயம் ஆகப் போகின்றதே! இது யார் செய்த முடிவு? விசுவாமித்திர மாமுனிவரா? இல்லை!

'திருவின் கேள்வன் ஆதற்கு ஏற்படும் சூழ்நிலையில் தந்தையும் தாயுமாகிய நீரே நிச்சயம் செய்திடலாம்' என மறைமுகமாகத் தயரதனால் ஒப்புதல் அளிக்கப்பட்டவர் செய்த முடிவு ஈது!

''இனித் தனித் தாயும் நீ' என்றாரே''— அதன் உட் பொருள் என்னவோ?

பத்துமாதம் சுமந்து இராமனைப் பெற்றவள் கோசலை. ஆனால், அவனை அன்பொழுக வளர்த்தவளோ கைகேயித் தாய். ஆக, இராமனின் திருமணம் பற்றிக் கருத்துக் கூறவோ, முடிவு மேற்கொள்ளவோ அவர்கள் இருவருக்கே உரிமை உண்டு.

இதனை நினைவுறுத்துவான் போலவே கம்பர் பின்னர், இராமனைக் குறிப்பிடும் பொழுது 'கோசலை குருசில்' என்னும் தொடரைக் கையாண்டுள்ளார்! எப்பொழுது? வேள்வி முடிந்தபின் மிதிலைக்குப் புறப்படும் முன்பு— அதாவது சீதா இராமர் திருமணத்தை விசுவாமித்திரர் மனத்தில் திட்ட மிட்ட பொழுது, இத் தொடர் வருகின்றது! 'அடுத்து யான் செய்ய வேண்டுவது யாது?' என்று விசுவாமித்திரரை இராமன் கேட்டான் என்பதைக் கூறவந்த கவிச் சக்கரவர்த்தி இராமனை, 'கோசலை குரிசில்' எனக் குறிப்பிட்டுள்ளார். பொருத்தமான இடம் கண்டு! இதே விசுவாமித்திரர்க்குத் 'தனித்தாய்' என்ற தகைமையையும் உறுதிப்படுத்துகின்றது!

அப்படியானால், சந்தர்ப்பத்திற்கேற்ப அவர்கள் இரு வரையுமோ, இருவருள் ஒருவரையோ காண்டல் ஏலாது போயின் என்னுவது? காரியம் தடைப்படக் கூடாது. அதற்கெனத் தனித்துவம் விளங்க ஒரு தாயை நியமித்தான் தயரதன் ஆம். அத் தனித்துவம் வாய்ந்த தாயாகவும் தயரதன் விசுவாமித்திரரை நியமித்து விட்டான்! 'தந்தனென் இயைந்தது செய்க!' என்றே கூறிவிட்டான்.

மணமகனின் தாய் தந்தையர் உடன் இருந்துதான் மணவினை நிச்சயிக்கப் படவேண்டும் என்ற நியதியை சனகனும் அறிந்திருந்தான். எனவே, 'இராமனின் தாய் தந்தையர் வரட்டுமே, இம் மணவினையை உறுதிப்படுத்த' என்று அவன் கூறவில்லை. அப்படியானால் அறிந்திருந்த மரபை மீறினானோ?

இராமன் வில்லொடித்ததுமே, தன் நிபந்தனைப்படி சீதையை அவனுக்கே திருமணம் செய்து தருவது என்பதை நிச்சயித்து விட்டான். அப்படியானால் ஒருதலைப் பட்சமான நிச்சயமா? இல்லை! அவன் விசுவாமித்திரரை நோக்கி,

"உரை செய்-எம் பெரும! உன்புதல்வன் வேள்விதான்,
விரைவின், இன்று, ஒருபகல் முடித்தல் வேட்கையோ?"

என்று கேட்டான். எனவே, முனிவர்தான் இராமனுக்கு மணவினையைப் பொறுத்த வரையில் தந்தை, தாய் ஆகின்றார் என்பது உறுதிப் படுகின்றது!

அப்படியானால் தயரதன் நிலை என்ன? "முரசு எறிந்து அதிர் கழல் முழங்குதானை அவ்வரசையும் இவ்வழி அழைத்தல் வேட்கையோ?" என்று சனகன் தொடர்ந்து கேட்கின்றான்.

ஆக, இராமனை ஈன்றவரினும் அவனைத் தன்பால் ஈந்தவனே அவனுக்குத் தந்தைதாய் என உறுதிப் படுத்திக் கொண்ட சனக மன்னன் தயரதனை—இராமனை ஈன்றவனை—ஒரு அரசன் என்ற நிலையில்தான் வைத்தான் எனக் காண்கின்றோம்!

சனகன் 'அரசையும்' என்றதனால் தயரதனை மட்டும் குறிக்கவில்லை; அது விழைவு. ஆனால், 'அரசனையும்' என்றே கூறியிருக்கலாம். அஃது அரசியரையும் குறிப்பிட்டு—இராமனை ஈன்ற தாயையும், வளர்த்த தாயையும், மற்ற தாயையும் குறிப்பிட்டு—நிற்கின்றது. ஆகவேதான், 'உன் புதல்வன்' என்ற சொல்லிற்கு மாமுனிவரை இராமனின் தந்தையாகவும் தாயாகவும் நம்மால் உருவகிக்க முடிகின்றது.

உலகியல் முறைகளும் கடைப் பிடிக்கப்பட வேண்டும்; காரியங்களும் காலதாமதப் படலாகாது. இத்தனையும் உணர்ந்த கவிச் சக்கரவர்த்தி கம்பர் தன் வல்லமை காட்டிச் சொற்களையும், சொற்றொடர்களையும் பெய்து வென்றுள்ளார் என்றறிந்து மனம் மகிழ்கின்றோம்!

# பின்னும் தாழ்குழல் பேதை

விசுவாமித்திர மாமுனிவர், வேள்வியைக் காக்கும் பொருட்டுத் தயரதனிடம் இராமனைத் தம்முடன் அனுப்பக் கேட்டார். முதலில் இசையாதவன் முடிவில் இராமனையும் இலக்குவனையும் முனிவருடன் அனுப்பினான்.

மூவரும் செழிப்பான சரயு நதிக்கரையைத் தாண்டி, எரி பட்டதோர் சோலையையும் கண்டு, அங்க நாட்டில் உள்ள காமன் ஆச்சிரமம் அடைந்தனர்; அவ்வாச்சிரமத்தின் சிறப்பை விசுவாமித்திரர் எடுத்துரைத்தார். மூவரும் அன்று அங்கே தங்கி மறுநாள் பாலைவனம் ஒன்றைச் சார்ந்தனர்.

அப்பாலை நிலத்தின் தன்மையும் தோற்றமும் சொல்லுந் தரத்தது அன்று.

> "படியின்மேல் வெம்மையைப் பகரினும், பகரும் நா
> முடிய வேம்; முடியமுடு இருளும் வான் முகடும் வேம்;
> விடியுமேல், வெயிலுமவேம்; மழையும்வேம்; மின்னிளேடு
> இடியும் வேம்; என்னில், வேறு யாவை வேவாதவே?

என்று கம்பரே அஞ்சி அரை குறையாகக் கூறி விட்டார்! அந்த அரைகுறை வர்ணனையே முழுமையாகிப் படிப்போரை வெங்கனலில் தள்ளுகின்ற தென்றால் அதன் கொடுமையை எப்படிச் சொல்வது?

பாலை வெம்மையைத் தாங்கும் பொருட்டு இராம இலக்குவருக்கு இரு மந்திரங்களைக் கோசிக மாமுனிவர் உபதேசித்தார். அந்நிலம் இவ்வளவு கொடுமைத் தன்மைபெற யாது

காரணம் என இராமன் கேட்டான். தாடகையென்ற அரக் கியால் இவ்வாறு ஆகியது என்று கூறி அத் தாடகையின் வரலாற்றை முனிவர் உரைத்தார்.

'எல்லா உயிர்களையும் கொன்று குவிக்கும் வாழ்க்கை உடையவள்; எமனைப் போன்ற தோற்றம் உடையவள். ஆயிரம் யானைகளின் பலம் பொருந்தியவள். மண்ணுலகைத் தோண்டி யெடுக்கவும், கடலைத் தூர்க்கவும், விண்ணை இடிக்கவும் கூடிய வல்லமை பெற்றவள். இரு பெரு மலைகள் போன்ற தனங்களோடும், கண்களெனும் விஷத் தேக்கங்க ளோடும், பேரிடிக் குரலோடும், "ஊழித்தீ போன்ற தலை முடியோடும் இரண்டு பிறைச் சந்திரன்கள் போன்று வளைந் துள்ள பற்களோடும் தோன்றிய கருங்கடல் உருவம் ஒன்று உண்டு என்றால் அது அவளுடைய மேனிதான்! நாகமாகிய கங்கணம் கட்டிய சூலம் தாங்கிய கையினள்! என்றெல்லாம் அவளைப் பற்றி வர்ணித்தார் விசுவாமித்திரர்.

அனைத்தையும் கேட்ட இராமன் 'அத்தாடகை எங்கு இருக்கின்றாள்?' எனக் கேட்டேன். அவ்வாறு அவன் கேட்டு முடிப்பதற்கு முன்னமேயே நெருப்பு எரிகின்ற பெரியமலை யொன்று வந்தது போல அங்கே தாடகை வந்து குதித்தாள்!

முனிவர், வர்ணனையைக் கேட்டிருந்த இராமன் இப்பொழுது அவளை நேரிலேயே கண்டான்!

மலைகளோடு மலைகள் பின்னியது போன்ற சிலம்பு களோடு நிலம் அதிர்ந்திடக் குதித்து வந்தாள். எமனும் கண்டு அஞ்சி பாதாளத்தில் புகுந்து கொள்ளும்படி பயங்கர மாக வந்தாள்.

கடைப் புருவங்கள் துடித்தன. குகை போன்ற வாய் பிதுக்கி விகாரமாய் இருந்தது. வடவைக் கனல் போன்று நெருப்புஎழ விழித்த பார்வை. அளவில்லாது பெருத்த

இடுப்பு. இத்தனையும் கொண்டு கர்ஜித்த வண்ணம் வந்தாள்.

இவ்வளவு கோர உருவுடனும், கோரப் பார்வையுடனும் வந்துத் தன்னை எதிர்த்தாளேனும் 'அவள் பெண்தானே; அவளைக் கொல்லலாமா?' என்ற அறவுள்ளத்தோடு, மனித தர்மத்தோடு நின்றான், இராமன்.

இராமனின் மனோ நிலையைப் புரிந்து கொண்டார் விசுவாமித்திரர்.

''வெறிந்த செம்மயிர் வெள் எயிற்றாள், தனை
எறிந்து கொள்வென் என்று ஏற்கவும், பார்க்கிலாச்
செறிந்த தாரவன் சிந்தைக் கருத்து எலாம்
அறிந்து, நான்மறை அந்தணன் கூறுவான்''

எனக் கம்பர் குறிக்கின்றார்!

இவளைப் பெண் என்று நினைக்கலாமா? வலிய திறமை கொண்ட ஆடவர்களே இவளுடைய பேரைச் சொன்னால் அஞ்சி ஓடுவார்கள் என்றால் ஆண்மை இவளிடத்தில் அல்லதா செறிந்துள்ளது! என்றெல்லாம் பலவாறாக எடுத்துக் கூறி அவளைப் பெண் என நினைந்து விட்டு விடுதல் கூடாது என்று முனிவர் வற்புறுத்துகின்றார். அப்பொழ்து,

''மன்னும் பல் உயிர் வாரி, தன்வாய்ப் பெய்து
தின்னும் புன்மையின் தீமை ஏதோ?— ஐய!
பின்னும் தாழ்குழல் பேதமைப்பெண் இவள்
என்னும் தன்மை, எளிமையின் பாலதே!''

என்று கூறுகின்றார்.

சொல்லுக்குச் சொல் கொடூரமான வர்ணனைக்கு ஆளானவள். கண்ணெதிரே பார்த்த பார்வைக்கோ பயங்கரமான தோற்றங் கொண்டவள். கேட்டாலே நடுங்குகின்றோம்.

இத்தனைக் கோரமானவளை இராமன் மட்டும் அந்தச் சூழ்நிலையில் 'பின்னிய சடைகள் கிழாகத் தொங்குகின்ற எளிய பெண்' என்ற அளவிற்கு இறங்கிக் காண்பானா? அல்லது அவ்வாறு எளிய உருவில் இருப்பவள் என்று எண்ணித் தான் பார்ப்பானா?

பின் ஏன் முனிவர் வாயிலாக மலைக்கும் மடுவுக்கும் வேறு பாட்டு வர்ணனை தோன்றியது? விசுவாமித்திரரின் தீர்க்க தரிசனப் பார்வைதான் அவ்வாறு பேச வைத்தது!

ஆயிரமாயிரம் அரக்கியர் அவருடைய அகக்கண்ணில் தோன்றினர். அவரின் கொடுமைகளும் கோரமும் அவரின் மனக் கண்ணில் வீழ்ந்தன. இடையில் தனியொரு அரக்கியின் பார்வை பட்டது. அவள் மூன்று சடைகளைப் பின்னிக் கொண்டவளாய் இருந்தாள்; தாயன்பின் மிக்கு இருந்தாள்; நயமான சிந்தையுடையவளாக இருந்தாள்.

இத்தகையவளின் காட்சி எங்கே பட்டது! அசோக வனத்து அழகுச் சூழலில் அன்னை பிராட்டியின் அவலத்தின் அருகில்! ஆம், அரக்கியாய்ப் பிறந்தும் அருங்குணத்தோடு விளங்கிய — விளங்கப் போகின்ற — உருவம் தோன்றியது!

உடனே வெங்கானச் சூழலில் கொடூரமாய் நின்ற தாடகையையும் அருமை வனச் சூழலில் நின்ற திரிசடையையும் ஒப்பு நோக்கிய நெஞ்சத்தினர் ஆயினர், விசுவாமித்திரர். இதனை இராமன் உணர்வானா, புரிந்துகொள்வானா, இல்லையா என்றெல்லாம் சிந்திக்கவே அவருக்குத் தோன்றவில்லை.

'ஊழித் தீ [போன்ற தலைமுடி]', 'வெறிந்த செம்மயிர்' என்றெல்லாம் தாழ்த்துப் பேசி தாடகையின் தோற்றத்தைத் தலைவிரி கோலமாய்க் காட்டியவர், திடீரெனப் 'பின்னும் தாழ்குழல் பேதைமையள்' என்று திரிசடையின் மென்மைக்கு ஒப்பானவளாகக் கொள்ளுதல் கூடாது என்று இராமனுக்குச் சொல்லாமல் சொல்லி, தாடகையை இராமன் கையால் கொல்வித்தார் எனக் காண்கின்றோம்!

# பெரிய காரியம் உள!

தாடகை வதம் முடிந்தது. விசுவாமித்திர முனிவரின் வேள்வியும் முடிந்தது. அவ்வேள்வியைக் காத்து முடித்த இராமன் முனிவரிடம்,

"இன்று யான் செயும் பணி என்கொல்? பணி"

என இசைத்தான்.

ஏதும் பணி இருந்தால் இயம்ப வேண்டும்; இன்றேல், இல்லையென்ன வேண்டும்! அதனை விடுத்து முனிவர்,

"அரிய யான் சொலின் ஐய! நிற்கு அரியது ஒன்று இல்லை;
பெரிய காரியம் உள; அவை முடிப்பது பின்னர்;
விரியும் வார் புனல் மருதம் சூழ்மிதிலையர் கோமான்
புரியும் வேள்வியும் காண்டும் நாம்; எழுக!"

என்றார்.

இவ்வளவு நீண்ட பதில் ஒரு முனிவரிடமிருந்து வரத் தேவையுண்டா?

விசுவாமித்திரர் மாமுனிவர் ஆயிற்றே! அவர் முக்காலமும் அறிய வல்ல ஞானி! அவருக்கு இராமன், திருமாலின் அவதாரம் என்பது தெரியும்: அந்த அவதாரத்தின் நோக்கமும் தெரியும்! அந்த நோக்கமாகிய இராவண வதத்திற்கு முன்னோடியாகத் தாடகை வதம் என்னும் பயிற்சியைத் தருவதைப் போலே தன் வேள்வி காக்க என்னும் காரணம் காட்டி அழைத்து வந்தார் வனத்திற்கு!

தயரதன் அவையில், வசிட்டர், விசுவாமித்திரரின் கருத்தை உன்னிப் பேசியதால் உணர்கின்றோம்.

இராமனோ, தான் அவதார புருஷன் என்பதையே உணராதவன்போல் நடந்து கொண்டுள்ளான். அவன் தன்னுடைய (திருமாலினுடைய) முன்னைய அவதாரமான வாமன அவதாரம் பற்றி விசுவாமித்திரர் அவனுக்கே வர்ணிக்கின்றார், வரும் வழியில்! அப்பொழுதும் இராமன் ஒன்றும் அறியாதவனாகவே கேட்டு நிற்கின்றான்!

இதனை நினைந்து பார்த்தார் விசுவாமித்திரர். வெறும் தொண்டன் போலே இராமன், 'இனியும் என்ன பணியுளது?' என்று கேட்டு நின்ற நிலையில் அந்நினைவு வந்தது.

"ஹே, இராமா! நீ யார் என்பதை நான் அறியாதவன் அல்ல. நீ என்னதான் உன்னையே மறைத்துக் கொண்டாலும், நீ பின்னாளில் பெரிய காரியமான — உன் அவதார நோக்க மான— இராவண வதம் செய்யப் போகின்றாய்! அதற்கு முன்னேற்பாடாக மிதிலைக்குச் சென்று ஆவன செய்வோம்— சீதையைத் திருமணம் கொள்வாயாக— வா" என்று வெளிப் படையாகக் கூறாமல் கூற முயன்றவர்க்கு இந்நெடிய மாற்ற உரை தேவைதானே!

'காண்டும்' என்றாலே 'காண்போம் நாம்' என்று தானே விரியும். அப்படியிருக்கக் 'காண்டும் நாம்' என்று, 'நாம்' என்ற சொல்லைப் பெய்வானேன? மிகையன்றோ?

மிகை அன்று! அஃது தரும் மிகையானதொரு சிறப்புப் பொருளைக் காண்போம! சனகன் இயற்றும் வேள்வியைக் காணப் போவது நாம் மூவரும்; அதன் இறுதிப் பயனை அடையப் போவது நீ! என்பதனை மறைமுகமாக எடுத்துக் காட்ட வந்த சொல்லே அது!

மிதிலையில் சனகன் விசுவாமித்திரரிடம் இராம இலக்குவரைக் காட்டி, 'யார் இவர்?' என்றான். 'சனகன்

வேள்வியைக் காண்டும் நாம்' என்று மூவரையும் உள்ளடக்கிச் சொல்லிய முனிவர், சனகனின் கேள்விக்கு பதில் அளிக்கையில், வேள்வி காண வந்தவருள்ளிருந்து தம்மைத் தள்ளி விட்டு,

> 'விருந்தினர்கள்; நின்னுடைய வேள்வி
> காணிய வந்தார்; வில்லும் காண்பர்;
> பெருந் தகைமைத் தயரதன் தன் புதல்வர்'

என இருவராக்கி நின்றார்.

வேள்வியின் பயனை அடைய வேண்டுவது ஒருவனே அன்றோ? அதுவும் இராமனே அன்றோ! ஆக, இருவர் நிலை நிற்றலும் ஏற்புடைத்து அல்ல. ஆகவே, இலக்குவனையும் நீக்கி இராமனுக்குத் தனித்துவம் எப்படித் தந்தார்?

'அவர் தகைமை பேசலுற்றார்' அவ்வாறு பேசிச் செல்லும் பொழுது அவரது குலமுறையைக் காட்டினார். தயரதனுடைய மகப்பேற்று வரலாற்றை உரைத்தார்; குமரர்கள் நால்வரும் கல்வி கற்ற வரலாறு கழறினார்; அந் நால்வரிலிருந்து இருவரை வேள்வி காக்க வனத்திற்கு அழைத்துச் சென்றதைக் குறிப்பிட்டார். அங்கே, 'பூங்கழலார்'க் கொண்டு போய் வனம் புக்கேன்' என்று கூறி, 'இருவர்' என்பதைக் கதைப் போக்கால் நம்மை உய்த்துணர வைத்ததனால், அங்கேயே இராமனுக்குத் தனித்துவம் காட்டத் தலைப்பட்டு விட்டார். தொடர்ந்து, தாடகையை வதைத்து வேள்வி காத்த பணியில் இலக்குவனின் பெருந் தொண்டு இருந்தும் இராமனின் ஆற்றலையே வியந்து பாராட்டினார். இறுதியில், இராமனின் வில்லாற்றலை மட்டும் எடுத்து விளக்கினார். அவன் அகலிகைக்கு முன்னை உருத் தந்த பெருமையையும் எடுத்துக் காட்டினார்!

இவ்வாறாக, இராமனின் தனித்துவத்தை வெளிப்படுத்தியவர், அவனுடைய அவதார இரகசியத்தை மனத்தில்

கொண்டுதான் மேலே குறிப்பிட்ட நெடிய பதிலைத் தந்தார் என்னும் போழ்வு, கவிச்சக்கரவர்த்தியின் சொற் கூர்மை விளங்குகின்ற தன்றோ!

இனி, 'காண்டும் நாம்' என்றதனால் இனியொரு பொருளும் காணக் கிடக்கின்றது.

"இராமா! நீ பின்னர் செய்யப் போகின்ற பெரிய காரியம் உளது. அதனை எல்லோரும் நேரில் காண்டல் இயையாது. பெரும் போர் செய்து பேராற்றல் ஆண் மகனான இராவணனையே வீழ்த்தப் போகின்றாய்! அதனை, நான் உம்முடன் இருந்து நேரில் காணப் போவது இல்லை.

மிதிலையில் சனகன் இயற்றும் வேள்வியில் நீ காட்டப் போகும் வல்லமையை நானும் உடனிருந்து கண்டுகளிக்கப் போகின்றேன். எழுந்திடுக, செல்வோம்" என முனிவர் தானும் நேரில் காணப் போவதைச் சிறப்பாகக் குறிப்பிட்டுக் கூறுவதாய் அமைந்துள்ளது. 'காண்டும் நாம்' என்னும் இத் தொடர்!

# அன்னையே அனையாள்!

"இராம காதையில், ஒரு மனிதனாகிய இராமன், பண்பாட்டின் வழி வாழ்வாங்கு வாழ்ந்து, உயர்வடைந்து ஒரு தெய்வம் ஆகிறான்' என்பதைக் காட்டுகின்றார் கம்பர்" என்பர் பல பெரியோர்கள். ஆனால்,

> "மரதம் அனையவர் வரமும், வாழ்வும் ஓர்
> நிசரத கணைகளால் நீறுசெய்ய யாம்
> கசரத துரகமாக் கடல்கொள் காவலன்
> தசரதன் மதலையாய் வருதும் தாரணி"

என தேவர் ஆகியோர்க்குத் திருமால் கொடுத்திருந்த அருள் வாக்கைத் தன் ஞானக் கண்ணால் வசிட்டர் நினைவிற்குக் கொண்டு வந்தார் என்று கூறும் முகத்தால், இராமன் ஓர் அவதார புருஷன் என்பதைச் சொல்லாமல் சொல்லிவிட்டார் கம்பர், எனப் புரிந்து கொள்கின்றோம் தொடக்கத்திலேயே

மேலும், 'இராமன் தன் அவதார நிலையைத் தானே அறியாதவனாக வளர்ந்து வந்தான்' என்பர். ஆனால், ஆரம்பத்திலிருந்தே அவனுடைய சில சொற்களும், செயல்களும், நடையுடை பாவனைகளும், தான் ஓர் அவதார புருஷன்' என்ற நினைவினை இராமன் இடைவிடாது பெற்றிருந்தான் என்றாலும், வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளவில்லை என்பதை நமக்கு நன்கு விளக்குகின்றன.

வேள்வி காத்து, முடித்த பின் இராமனும் இலக்குவனும் விசுவாமித்திரரைப் பின்தொடர்ந்து மிதிலைக்குச் சென்று கொண்டிருந்தனர். வழியில் இராமனுடைய கால்தூசுபட்டு ஒரு கல் பெண்ணாகி நிற்கக் கண்டனர்! இராமன் வியந்தவன்

போல் நடித்தான். ஒன்றும் அறியாதவன் போலே முனிவரிடம், இவ்வாறு 'அடுத்தரு அருள்க' எனக் கேட்டான்.

அவ்வாறு கேட்ட போழ்து, அந்தப் பெண்ணை 'அன்னையே அனையாள்' எனக் குறிப்பிட்டுப் பேசினான். இராமன்.

ஏன் இவ்வாறு குறிப்பிட்டான் என்பதை ஆழ்ந்து ஆய்ந்தால் அருமை ஒன்று விளங்கும்!

இராமனின் கால் துகள் பட்டு கல்லாகியிருந்த அகலிகை எழுந்தபோது அவள் எப்படியிருந்தாள்?

''அஞ்சன வண்ணத்தான் தன்அடித் துகள் கதுவா
முன்னம்
வஞ்சிபோல் இடையாள் முன்னை வண்ணத்தள்
ஆகினின்றாள்''

ஆம்; அவளின் இளமை மாறவில்லை, அழகு குறையவில்லை! எனவே, 'வயதின் முதிர்ந்தவளாய்' நின்றதனால் இராமன் அவளை 'அன்னை' யென்றுணர எனக் கொள்வதற்கு இல்லை.

எந்தப் பெண்ணையும் 'தாய்' என நினைந்து பேசுதலே தமிழ் நாட்டுப் பண்பு; அதனால், 'அன்னை' யெனக் குறிப்பிடச் செய்தார் கம்பர், என்று கூறலாம். அப்படியானால் 'அன்னையிவட்கு' என்று கூறியிருக்கலாமே! 'அன்னையனையாட்கு' என அன்னை போல்வாட்கு என்று பொருள்பட ஏன் குறிப்பிட வேண்டும்? ஆக, அதுவும் அவ்வளவு பொருந்தவில்லை. நிற்க,

இராமனை ஈன்றவள்தான் கோசலையேயன்றிக் குழந்தையெனக் குறைவில்லாது, குதூகலத்துடன் வளர்த்தவளோ, 'கைகேயி' அவளைச் சிற்றன்னையென நினையாது, 'அன்னை' யாகவேப் போற்றி வந்தான், இராமன். எனவேதான்,

இறுதியில், தேவலோகத்தில் இருந்து வந்த தன் தந்தை இராமனை வரங்கள் கேட்க வற்புறுத்திய பொழுது,

"தீயள் என்று நீ துறந்த என்தெய்வமும் மகனும்
தாயும் தம்பியும் ஆம்வரம் தருக"

என்று கேட்டான்! தன்னை இவ்வளவு துயர்க்கு ஆட்படுத்திய பின்னும் கைகேயியைச் 'சிறியதாய்' ஆகும் வரம் தருக எனக் குறிப்பிடவில்லை.

இராமனின் பெருந்தன்மையே இவ்வாறு அவன் கேட்டமைக்குக் காரணம் என்னல் தவறு அல்ல. ஆனால், அதனினும் சிறந்ததொரு காரணம் உண்டு!

இராமனைக் காட்டிற்கு அனுப்பவும், பரதனுக்கு முடி சூட்டவும் கைகேயி வரங்கள் கேட்டது அவளுடைய உள்ளார்ந்த மனத்திலிருந்து வெளி வந்தவை அல்ல.

"தீய மந்தரைஇவ் வுரை செப்பலும், தேவி
தூய சிந்தையும் திரிந்தது—சூழச்சியின் இமையோர்
மாயையும், அவர் பெற்றநல் வரம்உண்மையாலும்
ஆய அந்தணர் இயற்றியஅருந் தவத்தாலும்,
அரக்கர் பாவமும், அல்லவர் இயற்றிய அறமும்,
துரக்க நல்அருள் துறந்தனள் தூமொழி மடமான்"

என்ற பல வெளிக் காரணங்களால்தான் மனம் மாறினள், கைகேயி! இதை இராமன்—தெய்வத்திரு அவதாரன்—உணர்ந்தான்.

"தந்தையும், தாயும்,நீரே: தலைநின்றேன்;பணிமின்"

என்றான்.

இவ்வாறு, கைகேயியாகிய தன் அன்னை பிழை செய்யப் போகின்றாள், அடுத்தவர்களுக்கான சூழ்நிலையால் என்பதை, அகலிகையைக் கண்டவுடனேயே, தன் அவதார நோக்குணர்வால் புரிந்து கொள்கின்றான், இராமன்.

அதேபோல்தான் அகலிகையும் இந்திரன் வஞ்சித்த சூழ்நிலையால்தான் பிழை செய்தாள் என்பதையும் தன் ஞானக் கண்ணால் உணர்ந்து கொள்கின்றான், இராமன்! என்றாலும், ஒன்றும் அறியாதவன் போலே அவட்கு அக்கதி நேர்ந்த வரலாற்றை முனிவரிடம் கேட்டான்!

அனைத்தும் கேட்ட பின்னும் இராமன் அகலிகையை 'அன்னை யனையாள்' எனும் நிலையை மாற்றி 'அன்னை' என்றே விளிக்கின்றான், அன்னை கைகேயிக்கு இணையாக நினைந்து!

இஃது இராமனின் பெருமையை மட்டுமா காட்டு கின்றது?

தான் அவதார புருஷன் என்பதை மெல்லிய நூலிழை போல் நெடுக விட்டுக் காட்டுகின்றான்! இவ்வாறான நூல் இழையை நீட்டிக் காட்டச் சொற்களால் பட்டம் கட்டித் தருகின்றார், கம்பர்!

இந்நூலிழையின் இன்னமும் சில பகுதிகளை, 'இராமன் —பரசுராமன்', 'பாகுபோல் மொழிப் பைந்தொடி' போன்ற தலைப்புக் கட்டுரைகளிலும் காண்போம்.

# பாகுபோல் மொழிப் பைங்தொடி

விசுவாமித்திர மாமுனிவர் விழைந்தும் வலிந்தும் அழைத்து வந்தார் இராமனை; இலக்குவனும் உடன்வந்தான். முனிவரின் வேள்வி காத்து நின்றனர் இருவரும். வென்றியாய் வேள்வி முடிந்த பின்றை, முனிவரை நோக்கி, இராமன் இனியும் இடு பணி ஏதும் உளதோ எனக் கேட்டான்.

''விரியும் வார் புனல் மருதம்சூழ் மிதிலையர் கோமான்
புரியும் வேள்வியும், காண்டும் நாம்; எழுக''

என்றுதான் அம் மாமுனிவரும் மாற்றமுரைத்தாரேயன்றி என்ன வேள்வியென்றோ, வேள்வியின் வினைவாய்க் கிட்டக் கூடிய சனகன் புதல்வியாம் சீதை பற்றியோ குறிப்பாய் உணர்த்தவுமில்லை; ஒரு வார்த்தையும் வழுத்தவுமில்லை. பிள்ளையர் இருவரும் பின் தொடர்ந்தனர்.

மிதிலை நகர் புகுந்த மூவரும் மணி நெடுந்தெரு வழிச் சென்று, அரண்மனைச் சூழலை எய்தினர்.

முன்னம் முனிவர் ஏக, மோகன உருவினள் ஒருத்தி கன்னிமாடத்தே யிருக்கக் கண்டான், மூத்தோன்! நிலன் நோக்கி மேலே நின்றவளும் நீல நிறமேனி நீள் அழகனைக் கண்டாள்!

''கண்ணொடு கண்ணினைநோக்கு ஒக்கின்
வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல''

என்ற திருக்குறட்பாவின் உட்கருத்தை உன்னிப் பார்க்கும் அளவிற்குத் தனிமை இல்லை; அதனுல், அவர்கள் பேசிக் கொள்ளவில்லை; அதில் வியப்பு இல்லை. என்ருலும் அவர்தம் இணை பார்வையின் இணையிலாக் கருத்துப் பரிமாற்றத்தைக் கவிச் சக்கரவர்த்தி வர்ணிப்பதைக் காணுங்கால் முப்பாலின் நினைவு முந்துருது இராது!

அத்துணை வர்ணனைகளும் கம்பர் வழுத்திஞரேயன்றி, சிதை சிந்திய சிரிப்பொலியோ, செந் நாப் பேச்சோ இராமன் கேட்டானில்லை. மாருக, அவள் வாயடைத்தே நின்ருள், பதுமையைப் போல் என்கின்ருர் கம்பர்.

"அந்தம் இல்நோக்கு இமை அணைகிலாமையால்,
பைந்தொடி, ஓவியப் பாவை போன்றனள்"

என்கின்ருர்.

கண்கண்ட காளையின் நினைவால் கருத்திழந்து காம நோய் வாய்ப்பட்டு, நொந்திருத்தல், மேலே கண்ட காட்சி யின் தொடர்ச்சியாகவே நிகழ்கின்றது. ஆயின்,

"சிந்தையும், நிறையும், மெய்ந்நலனும், பின் செல
மைந்தனும், முனியொடு மறையப் போயினுன்"

எனக் கம்பர் கூறிய இராமன் அக்காட்சியின் நினைவிற்குப் பின்னரும் வந்தது எப்போழ்து?

விசுவாமித்திரர் முதலிய மூவரும் சனகன் எதிர்கொளச் சென்றனர்; மாளிகையில் தங்கினர்; சதானந்த முனிவருடன் அளவளாவினர்; அவரும்: அருமுனி கோசிகரின் வாழ்க்கை வரலாற்றில் அரும் பகுதியை விளக்கமாய் எடுத்துரைத்தார்; அவர் சென்றபின் முனிவரும், இளையவனும் தம்தம் இருக் கைகளுக்கு ஏகினர்; அதன் பின்னர் தான் இராமன், தான் வழியிற் கண்ட பெண்ணை [சிதையை] நினைந்தான்.

"முனியும் தம்பியும் போய் முறையால் தமக்கு
இனிய பள்ளிகள் எய்தியபின், இருட்
கனியும் போல்பவன், கங்குலும், திங்களும்
தனியும், தானும், அத்தையனும் ஆயினுன்!"

நினைந்த நெஞ்சினில் நின்றது நீள் நெடும் கண்ணாளின் உருவெளித் தோற்றம்! அவன், அவளைத் தன் கண்ணின் உள்ளும் கருத்துள்ளும் கண்டான்! அவள், அவனுடைய உள்ளத் தாமரையுள் உறைந்தாள். எல்லாப் பொருள் களும் அவளுடைய பொன் உருவம் ஆனதுபோல் எண்ணி னுன். வாள் நிலா போன்ற முறுவல் கனிந்த முகம், ஓர்நாள் காண்போமா என்று ஏங்கினுன்! அவளுடைய வாள் நெடுங் கண்ணும், தனங்களும், புன்முறுவலும் தன்னைக் கொல்ல வந்த எமன்கள் எனத் துடித்தான், பால் போன்ற வெண் ணிலவு அவனுக்கு வெள்ளை நிற விஷமாய்த் தோன்றியது.

இவையெல்லாம் மௌனமாய் உருவெளித் தோற்றத்தின் விளைவாய் எண்ணத்தைக் குழப்பக் கூடியவையே, காம நோய் வயப்பட்டவர்களுக்கு!

ஆனுல், அவள் ஊமையா—திக்கு வாயளா — இனிய மொழியளா? உருவெளித் தோற்றம் கற்பனை உருவம்—குரல் ஒலியையும் காட்ட இயலுமோ? இயலாது! அப்படியானுல், இராமன் சித்தம் மயங்கிச் சிதறுகின்ருனே, வாய்க்கு வந்த படியெல்லாம், வளம் இல்லாத வார்த்தைகளை, காதல் போதையில்,

"ஆகும் நல்வழி; அல்வழி என்மனம்
ஆகுமோ? இதற்கு ஆகிய காரணம்,
பாகுபோல் மொழிப் பைந்தொடி, கன்னியே
ஆகும்; வேறு இதற்கு ஐயுறவு இல்லையே!
பாகுபோல் மொழிப் பைந்தொடி"

என்ற தொடரின் பொருளை, வெல்லப் பாகினைப் போன்று இனிக்கப் பேசும் இளம் பெண்' என்று கொண்டால், அவன்

அவளுடைய பேச்சைக் கேட்கும் சிறு வாய்ப்பினையும் நாம் காணவில்லையே என்று நினைக்கின்றோம்!

இராமன் இதயத்தை இளம் பெண்ணிடத்தில் இழந்து விட்டதால் தன்மனத்தைக் கவர்ந்தவளின் சொல் இனிமை யாகத்தான் இருக்க வேண்டுமெனக் கருதி மகிழ்கின்றான். என்று கொள்ள முடியுமா? மேலே குறிப்பிட்டுள்ள பாடலின் முதல் இரண்டு வரிகளிலும், இறுதி வரியிலும் அவனுடைய சித்தத் தெளிவைக் காண்கின்றோமே! காரண காரியங்களைக் கருத்துடன் அலசிப் பேசுகின்றானே!

இரண்டும் இன்றேல் கம்பர் தாம் இராமன் வாய்வழிப் பிதற்றுகின்றாரா? அல்லவே அல்ல!

வடமொழி இராமாயணத்தில், திருமணத்தின் முன்னாக இவ்வாறு இருவரும் ஒருவர்க்கொருவர் கண்டதாய்க் கூறப் படவில்லை. தமிழர் நாகரிகத்திற்கும், பண்பாட்டிற்கும் ஒப்பத் தம் காவிய நாயகனையும், நாயகியையும் திரு மணத்தின் முன்பே காணச் செய்கின்றார் கம்பர்!

அவர் கடைப்பிடித்துள்ள இந்த காந்தர்வ மணப் பாங் கினைக் காட்டி நிற்பது தமிழாம் கன்னி ஏந்தும் காவியங் களே! ஆக, அக் கன்னித் தாயை ஈண்டு நினைவு கூர்ந்திடச் செய்கின்றார், கம்பர்.

‘என் நெஞ்சம் எப்போழ்தும் நல்வழியிலேயே செயல் படும்; அல்லாத வழிகளில் செல்லாது. அப்படியிருக்க என் இதயம், முன்பின் தெரியாத ஒரு பெண்ணி னிடத்தே ஒன்றி விட்டது ஒரே பார்வையில்; இதன் காரணம் என்ன? வெல்லம் என இனிக்கும் சொல்லியாகிய தமிழ்ப் பெண் போன்றவளோ அவள்? பழமையான மொழியாக இருந் தாலும் இளங்கன்னித் தன்மை யுடனேயே மிளிர்ந்து தோற்றம் அளிக்கின்றது, தமிழ்மொழி! அதுபோல் நான்

பார்த்த அவளும் ஒரு கன்னியாகத்தான் இருக்க வேண்டும்! அவளுக்குக் கணவன் இருக்க இயலாது; [நானே கணவன் ஆவேன்!] என்று தன்னுள்ளே தெளிந்து முடிவுறுகின்றான்!

இனி, தானே அவளுக்குத் தலைவன் என்பதைக் கூறிடவே, அக் கன்னியின் உரு வெளித் தோற்றத்தை உவந்திடும் போழ்து,

''வள்ளல் சேக்கைக் கரியவன் வைகுறும்
வெள்ளப் பாற்கடல்போல் மிளிர் கண்ணினாள்,
அள்ளல் பூமகள் ஆகும் கொலோ — எனது
உள்ளத் தாமரையுள் உறைகின்றதே?''

எனச் சந்தேகப்படுகின்றான்!

தான் திருமாலின் அவதாரம் என்றும், அக்கன்னி (சீதை) தன் தேவியின் அவதாரம் என்றும், தெளிந்தும் தெளியாதவன் போலே, விளங்கியும் விளங்காத சொற்களாலே பேசி நிற்கின்றான்!

இனிமைக்கு உவமையாக, 'தேன்', 'அமுது' எனப் பல இருக்க, ஈண்டு, 'பாகுபோல்' என்று கூறியதன் உள் நோக்கத்தை உன்னிப் பார்க்க வேண்டும்! இன்னமும் அதிகமாய்த் தித்திக்கும்!

பாகு ஒருவித பிசுபிசுப்புக் கொண்டது; தான் இணைந்த ஒன்றோடு இடைவிடாத தொடர்ச்சி கொள்ளும் திட - திரவ நிலையது. இராமனும் சீதையும் பாற்கடல் பள்ளி இணைப்பு அறாது. அன்புறவுப் பசையோடு ஈண்டுத் தோன்றியுள்ளனர் என்பதைக் குறிப்பால் உணர்த்தவே இந்த உவமை கூறப் பெற்றுள்ளது போலும்!

தமிழுக்கு ஒப்பாம் கன்னியே என வியந்தானே! தமிழோ மூத்த மொழி; தொன்மை வாய்ந்த மொழி

என்றாலும், கன்னியாய்த் திகழும் மொழி! அதற்கு ஒப்பானவள் என்றால், இராமன் கண்ட அப்பெண்ணும் மூத்தவளோ — தொன்மையளோ!

ஆம்; திருமகள் மூத்த தொன்மையள் அன்றோ! என்றாலும், என்றும் எங்கும் கன்னியாகவே - அதிலும் தன் பதியாகிய திருமாலுக்கு - தோன்றுவதில் வியப்பு என்னே?

மற்றும் இராமன் முதன் முதலில் சீதையைக் கன்னி மாடத்தில் கண்ட காட்சியை வர்ணிக்கும் பொழுது கம்பர் அவளை,

''பொன்னின் சோதி போதினின் நாற்றம் பொலிபூவின்
தென்உண் தேனின் தீஞ்சுவை செஞ்சொற் கவியின்பம்''

என்று குறிப்பிடுகின்றார். அதாவது, காணத்தகும் பொன்னொளிர் மேனியாள்; முகரத்தகும் மலர் மண மென்மையினள்; மலர்ந்து விளங்கும் மலரின் தேனீக்கள் உண்ணும் தேனைவிட மதுரமானவள்; தமிழ் மொழிக் கவி இன்பம் போன்றவளாகிய 'சீதை' எனப் போற்றப் படுகின்றாள்!

இத்துணை ஒற்றுமைத் தன்மைகளையும் கண்டே இராமன் அக் கன்னியைத் தன்னவள் எனத் திண்ணமாய்க் கருது கின்றான் என்னில் கம்பர் கையாளும் சொற்களின் திறமையும் திண்மையும் என்னென்பேம்! தாய்மொழி தமிழிற்குத் தக்கதோரிடத்தே மேன்மை காட்டிக் காதலிக்கும் பாங்கினை என்னென்பேம். (செஞ்சொல் = தமிழ் மொழி)

வாழ்க, வளர்க பாகுபோல் பொழிப் பைந்தொடியாம் தமிழ்க் கன்னி! வாழ்க, வளர்க! வளமுறு சொற்கள் வழங்கும் மா காவியமாம் கம்ப இராமாயணம்! வாழ்க, வளர்க நுண் பொருள் நோக்குகள்!

## மரா மரம்

மிதிலையில் சனகன், வைத்திருந்த வில்லை எடுத்தான் இராமன்.

> தடுத்து இமையாமல் இருந்தவர், தாளில்
> மடுத்ததும், நாண் நுதி வைத்ததும், நோக்கார்;
> கடுப்பினில் யாரும் அறிந்திலர்; கையால்
> "எடுத்தது கண்டனர்; இற்றது கேட்டார்"

அனைவரும் அவன் வில் எடுத்தது கண்டனர். இற்றது கேட்டார்.

அச்சமும் ஆச்சரியமும் தோன்ற மூவுலகும் நின்றது. இவ்வெற்றி வீரன் யாரோ என மிதிலை நகர மக்கள் நோக்கினர். மகிழ்ந்தனர்; அவருள் ஒருத்தி சீதையின் தோழியாகிய நிலமாலை என்பவள்.

நிலமாலையின் மகிழ்ச்சிக்கு எல்லையில்லாது போயிற்று! சீதை இருந்த இடத்திற்கு ஓடோடி வந்தாள். வழக்கம் போல் சீதையை வணங்கவில்லை. ஆடினாள், பாடினாள், உவகைக் கூச்சலிட்டிருந்தாள்.

அவளின் இந்த மகிழ்ச்சிக்குக் காரணமாய் அமைந்த செய்தி என்னவோ என்று சீதை கேட்டாள். அதன்பின் தான் சீதையைத் தான் வந்ததும் தொழவில்லை என்பதை உணர்ந்த நிலமாலை அவளைத் தொழுது சொல்லு வாளாயினாள்.

''வில்லொடித்த வீரன் தயரத குமாரன்; வடிவழகின் மிக்கவன்; இராமன் என்ற பெயரோன்; மாமுனிவர் ஒருவனுடனும், தன் தம்பியுடனும் வந்துள்ளான்'' என்றெல்லாம் விளக்கமாகக் கூறினள். அப்பொழுது உடல் அமைப்பை வர்ணிக்குங்கால்,

''மரா மரம் இவை என வலிய தோளினன்;
அரா - அணை அமலன் என்று அயிர்க்கும்
ஆற்றலான்;
இராமன் என்பது பெயர்; இளைய கோவொடும்
பராவ அரு முனியொடும், பதிவந்து எய்தினன்:''

என்று கூறினள்.

ஆற்றலில் திருமாலோ என்று வியக்கும் அளவிற்கு அமைந்த ஒருவன் என்றுசொன்னால் அவன் வீரத்தின் மிகுதி மிளிர்ந்திடுமோ! அதன் முன்னம் அவனுடைய தோள்களை மரத்திற்கு ஒப்பிடுவானேன்? அதிலும் வஜ்ஜிரம் பாய்ந்த முதுபெரும் மரத்திற்கு ஒப்பு என்று சொன்னால் போதுமே! 'மரா மரம்' என்றே எடுத்தியம்பியதின் நோக்கம் என்னே!

கிஷ்கிந்தையில் வாலிக்குப் பயந்து சுக்ரீவன் மலையில் வாழ்ந்து வந்தான். அவ்வழியில் இராம இலக்குவர் சென்றனர். அனுமன் வாயிலாக அவர்கள் யாரெனத் தெரிந்து கொண்டான் சுக்கிரீவன்: அவர்களோடு நட்புக் கொண்டான்.

எல்லோரும் உண்டிருக்கும் வேளையில் சுக்கிரீவன் மனைவியான உருமையை வாலி வௌவிச் சென்றுவிட்டான் என இராமனுக்குத் தெரிவிக்கப்பட்டது. இராமன் சினந்து வாலியைக் கொல்வதாகச் சூளுரைத்தான்

சுக்கிரீவனும் இராமனும் சந்தித்து நட்பு ஏற்படுத்திக் கொண்ட பொழுதே,

''உன்தனக்கு உரிய இன்பதுன்பங்கள் உள்ள முன்னாள்
சென்றனபோக, மேல்வந்து உறுவன தீர்ப்பல்; அன்ன
நின்றன, எனக்கும் நிற்குமனேர்'' எனவும்
''மற்று, இனி உரைப்பது என்னே? வானிடை,
மண்ணில், நின்னைச்
செற்றவர் என்னைச் செற்ருர்; தீயரே எனினும்,
உன்னேடு
உற்றவர் எனக்கும் உற்ருர். உன்கிளை எனது
என் காதல்
சுற்றம், உன் சுற்றம்; நீ என் இன் உயிர்த் துணைவன்''

எனவும் கூறியவன் ஆயிற்றே, இராமன்!

ஆனல் வாலியின் வலிமையை நன்குணர்ந்தவன் சுக்கிரீவன். ஆவவே இராமனுக்கு வாலியைக் கொல்லும் ஆற்றல் உண்டோ என ஐயுற்ருன்!

அவனது ஐயத்தை அறிந்த அனுமன் இராமனைப் பற்றி வானளாவப் புகழ்ந்து, போற்றி அவன் ஆற்றலை வெகுவாய் எடுத்துக் கூறினன். மேலும், நான் இவ்வளவு சொல்லியும் உனக்கு நம்பிக்கை இல்லையானல் ஓர் உபாயம் சொல்கின்றேன், கேள். அவனது வில்லாற்றலைப் பரிசோதிக்க வேண்டுமாயின் இங்கு நிற்கும் மரங்களில் ஒன்றினில் அவனுடைய அம்பினை எய்திடச் சொல்; வெற்றிகரமாய் முடித்தானுனல் அவன் ஆற்றலைப் புரிந்து கொள் என்ருன்!

அவ்வாறே, சுக்கிரீவன் இராமனை அணுகினன். வானுயர்ந்து நிற்கும் ஏழு மரங்களுள் ஒன்றினை உருவும்படி நின் அம்பு போமேயானல் என் மனத்துயர் நீங்கும் என்ருன்!

இந்தக் காட்சியில் காட்டப் பெறும் ஏழு மரங்கள் மா மரங்கள்—பெரிய மரங்கள்—என இருமுறையும் குறிக்கப் படுகின்றன. அவற்றைப் பற்றிய வர்ணனைகள் அவற்றின் உயரம், அகலம், பரவல் முதலியவற்றின் எல்லையற்ற

தன்மையை விளக்குகின்றன. ஆனால், அவை 'மரா மரங்கள்' என்னும் பெயரால் குறிக்கப் பெறவே இல்லை. என்றாலும், இத்துணை வர்ணனைகளும் பொருந்தியது 'மரா மரமே' என அனுமானிக்கப்படுகின்றது.

இராமன் அம்பெய்தான். அஃது ஏழு மரங்களையுமே தொளைத்துச் சென்றது.

வயிரத்தை வயிரத்தால் செவ்வனே அறுக்க முடியும் முடியும் என்னும் பழமொழிக்கேற்ப, மராமரங்களை ஊடுருவிச் செல்லும்படி அம்பெய்வதற்கு அம்மரா மரம் போன்று நீண்டு பருத்து, வலிமை மிகுந்து இருக்கக்கூடிய கைகளுக்கே யாகும்! இதனைக் கூற நினைத்த போழ்துதான் இராமனின் தோள்களை நீலமாலையின் வாயிலாக 'மரா மரம்' போன்றவை என வர்ணிக்கின்றார், கவிச் சக்கரவர்த்தி!

ஆக, கிஷ்கிந்தா காண்டத்தில் வரக்கூடிய மராமரப் படலத்திற்குக் கட்டியம் கூறுவதைப் போலே, பால காண்டத்திலேயே கம்பர் மரா மரங்கள் எனும் பெயர்ச் சொற்களை அமைத்துள்ளார் என உணர்ந்து மகிழ்கின்றோம்!

# மா இயல் நோக்கினுள்!

வயதின் முதிர்ந்தோர், அனுபவம் முதிர்ந்தோர், ஞானம் முதிர்ந்தோர், பூசைக் கிரியை முதலியன முதிர்ந்தோர், முனிவர்கள், மாமுனிவர்கள் யாவரேயாயினும், இறைவன் படைப்பில் காணும் எழிலை அனுபவத்தலும், அஃது பற்றிப் பேசுதலும், வியத்தலும் இயற்கையே. ஆனால் இந்த சுவைக்கும் தன்மை, இளைஞர், அனுபவம் அற்றோர்' அஞ்ஞான நிலையினர், நாகரிகம் குறைந்தோர், போன்றவர் களின் சுவைக்கும் தன்மைபோல் கீழ்மட்டத்தில் அமையாது. கண்ணியம், கட்டுப்பாடு, நாகரிகம் ஆய மேம்படு நிலைகளில் அமையும்; அவ்வழகு பற்றி எடுத்தியம்பும் சொற்களும் சொற்றொடர்களும் தெய்வீகம் பொருந்தியவையாய் இருக்கும். அவற்றைக் கேட்டோர் மனத்திலும் அவ் வழக்குக்குப் பாத்திரமான பொருட்கள், மனிதர்கள், விலங்குகள், மரங்கள் எதுவானாலும் ஒரு மதிப்பும் மரியாதை யும் தோன்றும்!

சீதையை மண்டபத்தில் கண்ணுற்ற வசிட்ட முனிவர், இந்த வகையில்தான் அவளின் அழகு மேம்பாட்டில் இறைத் தன்மையையுணர்ந்து உரைத்தார்!

> ''எங்கள் செய் தவத்தினில், இராமன் எனவந்தோன்,
> சங்கினெடு சக்கரமுடைத் தனிமுதற் பேர்
> அம் கண் அரசு; ஆதலின், அவ்அல்லி மலர்புல்லும்
> மங்கை இவள்ஆம்''

என வசிட்டர் மகிழ்வுற்றார்.

துன்று புரிகோதை எழில் கண்டு, உலகு சூழ்வந்து
ஒன்று புரிகோலொடு தனித்திகிரி உய்ப்பான்
என்றும், உலகு ஏழும், அரசு எய்தி உளனேனும்
இன்றுதிரு எய்தியது, இது என்ன வயம்!'

என்றான்.

வசிட்டனின் மகிழ்ச்சிச் சொற்களைக் கேட்கும் பொழுதும், படிக்கும் பொழுதும் நம்மையும் மறந்து சீதையின் பால் ஒருவகை மதிப்பும், அன்பு ஈர்ப்பும் ஏற்படுகின்றது!

அன்று மண்டபத்தில் இருந்த அனைவருமே சீதையைத் தெய்வம் எனக் கை கூப்பினரே!

''மைவளம் நவிற்று மொழி நண்ண வரலோடும்,
வையகம் நுகர் கொற்றவனும், மா தவரும், அல்லார்
கைகள் தலைபுக்கன; கருத்துளதும் எல்லாம்
தெய்வம்என உற்ற; உடல் சிந்தை வசம்அன்றே?

என்று கம்பரே வியப்பாரே! ஆனால், அன்று அவள் ஒரு சிறுபெண்; மணப்பெண்; அவ்வளவே!

மண்டபத்தில், இராமன் வந்து, ஆசனத்தில் அமர்ந்திருந்தான். தயரதனும் வந்து அமர்ந்திருந்தான். மண்டபத்துள் வந்து திரண்ட மன்னர்களின் வரிசைகளைச் சொல்லிட முடியாது. அனைவரையும் சனகன் உபசரித்த வண்ணம் இருந்தான்.

அப்போழ்து வசிட்டர் சீதையைக் கொணருமாறு சனகனிடம் கூறுகின்றார்.

"தேவியர் மருங்குசூழ, இந்திரன் இருக்கை சேர்ந்த
ஓவியம் உயிர் பெற்றென்ன உவந்து, அரசு
இருந்தகாலை,
தா இல் வெண் கவிகைச் செங்கோல் சனகனை இனிது
. ।
"மா இயல் நோக்கினாளைக் கொணர்க!"

என வசிட்டர் சொன்னார்.

"மா எனும் ஓரெழுத்துப் பல்பொருள் சொல்" விலங்கினைக் குறிக்கும். அவ்விலங்குகளுள் பார்வை சிறந்து மிளிர்வது மான். அதனால்தான் பாவையரை மான்விழியார் என்பர் இயற்கை தரும் இன்ப நோக்குடையார்.

"மானின் இயல்பினதாகிய பார்வையை உடைய சீதையைக் கொணர்க' என வசிட்டர் கூறினரா!

சீதை, மானின் பார்வையழகு உடையவள் என்பதைப் பின்வரும் என்று வியப்பர்.

"மான் அணி நோக்கினார்தம் மங்கலக் கழுத்துக்கு
எல்லாம்
தான் அணி ஆன போது, தனக்கு அணியாது மாதோ!"

மிதிலைக்கு வந்தபின் அனைவரும் தத்தமக்கு ஏற்பாடு செய்யப்பட்ட இடங்களில் தங்கியிருந்தனரே அன்றிச் சீதையை முன்கூட்டியே காணும் வாய்ப்பு பெறவில்லையே! இப்பொழுது தானே அவளை அழைத்து வருமாறு முனிவர் கூறுகின்றார்! அப்படியிருக்க அவளின் கண்ணழகை அவர் எப்படி, எங்கே கண்டார்?

அப்படியே அவர் சீதையை முன்னமேயே கண்டிருந்தாலும், அவளின் அங்க வர்ணனை சொல்லி அவளைக் குறிப்பிடலாமா? மேலே அவருடைய பெருந்தன்மையான

நோக்கும் சொற்போக்கும் கண்டோமே! அதிலும் அவை அவனே நேரில் அவர் கண்டபின் சொல்லிய பெருந்தன்மைச் சொற்கள் ஆயிற்றே!

ஆம்; இந்த எளிய—சாதாரண—பொருள், 'மா இயல் நோக்கு உடைய விலங்கு இனத்தின் பார்வை உடைய நமக்குத்தான் தோன்றும்! ஆனால் வசிட்டரோ, 'மாஞானி இயல் நோக்கு உடையவர்' ஆயிற்றே! அதனால், அவர் வேறு எதனையோ மறைமுகமாகக் குறிப்பிடவே இத்தொடரைக் கையாண்டுள்ளார் எனத் தெளிகின்றோம்

ஆரண்யத்தில் இராம இலக்குவரும் சீதையும் அமர்ந்துள்ளனர். இராவணனால் வற்புறுத்தப்பட்டு மாரீசன் மாய மானாய்—பொன்மானாய் அங்கு உலாவுகின்றான். அதனை முதலில் கண்டவள் சீதையே. ஆம்; அந்த 'மா இயல் நோக்கு உடையவளாக' இராமனிடம் நெருங்கினாள்.

மான் இயல்பான விலங்கைப் பார்த்தவளாகிய சீதை இராமனிடம் சென்று அதனைப் பிடித்துத் தருமாறு கேட்கிறாள்; காட்சி வளர்கிறது! காட்சி மட்டுமா கதையே வளர்வதற்கு இம் மாயமானே மூன்றாவது திருப்பு மையம் ஆயிற்றே! கூனி—கைகேயி கூட்டுச் செய்கை முதல் திருப்பம்; சூர்ப்பணகைத் தோற்றம் இரண்டாவது திருப்பம்; இது மூன்றாவது!

இந்தக் காட்சியை மானசீகமாகக் கண்ட ஞானியின் வாயிலாக வந்துவிட்டது. அக்காட்சியின் சுருக்கத்தைச் சொல்லும் 'மா இயல் நோக்கு உடையாள்' எனும் தொடர்! கம்பராம் கவிச் சக்கரவர்த்தியின் 'மாண்பு இயல் நோக்கினே' என்னென்பேம்!

## தாமரை அன்ன தடக்கையின் ஈந்தான்!

மிதிலையில் திருமணப் பந்தலில் இராமனும் சீதையும் வந்தமர்ந்திருந்தினர். சனகன் தாரை வார்த்து சீதையை இராமன் கையில் ஒப்படைத்தான்;

> "பூமகளும பொருளும் என, நீ என்
> மாமகள் தன்னொடும் மன்னுதி''

என வாழ்த்தினன்.

'பொருள்' என்பது அனைத்து வகைச் செல்வங்களையும் குறிக்க, அஃது செல்வ மகளை - திருமகளை - நினைவுறுத்தி நிற்கும். அப்படியானல், 'பூமகளும் திருமகளும் என' என்றாகின்றது.

சீதை, 'திருமகளின்' அவதாரம்! அப்படியானல் 'பூமகள்' யாரோ? இராமனை ஆணைப் பெண்ணாக்குகின்றானா, சனகன்!

உண்மையிலேயே பார்க்கப் போனல் இராவணவதம் முடியும் வரை சீதா இராமர் வாழ்க்கை இரண்டு பெண்டிர் இணைந்தது போலத் தானே ஆயிற்று! இல்லற வாழ்வின் இன்பங்கள் துறந்து ஆரண்யத்தே தவம் மேற்கொண்ட வாழ்க்கையாய்த் தானே அமைந்தது! எனவே, ஒரு வகையில் இந்நோக்கு பொருந்தும்.

அப்பொருத்தத்தின் விளக்கத்தினையும் சற்றே காண்போம்.

பூமகளும், நிருமகளும் திருமாலாம் ஒருவனுக்கேச் சொந்தம்; ஆனால், இருவரையும் அவன் ஒருங்கணைத்து வைத்திருந்தானா? அவள் அறியாமல் இவளையும், இவள் அறியாமல் அவளையும் அன்றோ அமர்த்தியிருந்தான், இருக்கின்றான். அதனால் தானே,

"அரவு ஆகிச் சுமத்தியால், அயில்
எயிற்றில் ஏந்துதியால்,
ஒருவாயில் விழுங்குதியால், ஓர்
அடியால் ஒளித்தியால்—
திருஆன நிலமகளை; இஃது அறிந்தால்
சீறாளோ,
மருஆரும் துழாய் அலங்கல் மணி
மார்பில் வைகுவாள்?"

என்று விராதன் பாடினான்!

ஆக, 'நீங்கள்' இருவரும் ஓரிடத்திலேயே இருந்து ஒருவர்க்கொருவர் இணைப்பு இன்றி வாழ்வீராக என்று வாழ்த்தியது போலாகின்றது. ஆம், அவ்வாழ்த்தின் பயனே இராமனும் சீதையும் ஒருங்கிருந்தும் பிரிந்த வாழ்வினைப் பெற்றது!

ஆம் போகமும் யோகமும் ஒன்றியிருந்ததுண்டோ? பொதுவாக உலக இன்பத்தில் திளைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு பரலோக இன்பம் கிடையாதுதென்றும், பரலோக இன்பத்தில் திளைதது கொண்டிருப்பவர்கள் உலக இன்பங்களை விட்டு விலகி இருப்பார்கள் என்றும் சொல்வதுண்டு என ரசிகமணி அவர்களும் குறிப்பிட்டுள்ளார்.

இராமனும் சீதையும் மணத் தவிசில் வீற்றிருந்ததை வியந்து வர்ணிக்கும்பொழுது, 'ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்' எனப் பாடுகின்றார் கம்பர்!

இவ்வாறு இணையாத ஒன்றினை இணைந்ததாகக் கண்ட சனகன், தன் வாழ்த்தினில் இணைந்திராத இரு திருமகளிரை யும் இணைத்துப் பார்த்துரைத்தானே! எப்படியானாலும் வா த்து வரப்போகும் இராமர் - சீதையின் வாழ்வை பிரதிபலித்து நின்றது எனக் காண்கின்றோம்!

இனி, 'பூமகள்' என்றதற்கு நீர் வளத்தோடு கூடிய பூமியின் வளம் என்றும், பொருள் என்றதற்கு வியாபாரம், கைத்தொழில் முதலான செல்வம் என்றும் கொண்டு, 'ஒரு நாட்டில் அவ்விரண்டும் ஒருங்கே கலந்திருக்க வேண்டும் அல்லவா? அப்படியே, நீங்கள் கலந்திருந்து வாழவேண்டும் என்று அருமையாய் வாழ்த்துகிறான் சனகன்' என ரசிகமணி திரு. டி. கே. சி. அவர்கள் விளக்குகின்றார்கள். இஃதும், ஓரளவிற்குப் பொருந்தும்!

இப்பொருத்தத்தின் விளக்கம் என்னே? உலகெங்கும் நீர் வளமும் பொருள் வளமும் ஒன்றாய்ப் பொருந்தி இன்ப மூட்ட வேண்டும் என்பது அனைவரின் ஆவல்; முயற்சியும்கூட. ஆனால், அவ்வாறான இணைப்பு எங்கும் என்றும் கண்ட துண்டா? ஒரேவழி ஒரு சில பகுதிகளில் தான் இதைக் காண்கின்றோம்; வியக்கின்றோம்.

அதேபோல ஆரண்யம் வரை இராமனும் சீதையும் சேர்ந்தினந்தவரே தவிர எங்கும் எப்பொழுதும் இணைந் திருக்கவில்லை: இணைந்திருந்த போழ்தும் ஒன்றியிருக்கவில்லை!

இவ்விரு நோக்குரைகளிலும் சீரியதோர் நோக்கு தோன்றுகின்றது,

"தாமரை அன்ன தடக்கையின் ஈந்தான்"

என்னும் வரியைப் படிக்கும் பொழுது!

இராமனின் திருக்கை தாமரை போன்று மென்மை யானது; அவ்வாறு மட்டும் நினைந்திருந்தால் 'தாமரைக்'

கையின் என்று கையாண்டிருக்கலாம். ஆனால், கம்பர் 'தாமரை அன்ன தடக்கை' என்கின்றார். அதாவது தாமரை போன்றது; விசாலமானது அக்கை யென்றாகின்றது; தாமரை மென்மையானது தான்; பிற சில பூக்களைக் காணும் பொழுது சற்று விரிவானதும்தான். ஆனால், 'விசாலமான' என்றது அம் மலரினும் அதன் இலைக்கே மிகப் பொருந்தும்.

இதனால், சனகன் இராமனின் மென்தாமரையின் விசால இலை போன்ற கையில் தாரை நீர் வார்த்தான் என்றாகின்றது. தாமரை இலையில் நீர் பட்டாலும் இலையோடு ஒட்டி விடுவதில்லை; விட்டு விடுவதும் இல்லை.

அஃதே போல், 'நீங்கள் இருவரும் பூமகளும் பொருளும் போல் இணைந்தும் இணையாது உலக நன்மைக்காக வாழ்க்கை மேற்கொள்வீராக' என்று ஆசித்தார் என உணர்கின்றோம்!

சீதையுடன் இராமன் சென்று அன்னைமாரை வணங்கினான். அப்பொழுது அவர்கள் ஆசியுரை நேரடியாகக் கூறவில்லையென்றாலும், அவ்விருவர் இணைப்பின் அழகை வியந்து

"நல் மகனுக்கு இவள் நல் அணி"

என்றார்.

அணிகலன் எதற்கு ஆகும்? மேலெழுந்த வாரியாக உடலில் அணிந்து அழகினைக் கூட்டிக் கொள்ளலாமே தவிர, முழுமையாய் உள்ளார்ந்த வகையில் அனுபவிக்க முடியுமா? மேலும், சமயத்தில் அணி காணாமற் போயினும் போம் அல்லவா? ஆகவே, 'சீதை இராமனுக்கு மனைவியாய் முழுமையாய் உலகியல் நோக்கிற்கு ஒப்ப அமையப் போவது இல்லை; ஓர் அணிகலம் போல் கொஞ்ச நாள் மிளிர்வாள்; பின்னாளில் அவள் காணாமலும் போவாள்' என்று அவர்கள் வாயிலாகக் கம்பர் கழலுகின்றார்!

இவ்வாறுன மறை பொருள்களைத் தோண்டியெடுத்து நாம் களித்திட வேண்டுமெனக் கம்பர் விழைந்தார் போலும்! சனகனின் வாழ்த்துரையை வடித்துக் கொடுத்தவர், பின்னர் எவர் வாயாலும் வந்த வாழ்த்துரை யின்னதென்று கூறவில்லை!

"அந்தணர் ஆசி அருங்கல மன்னர்
தந்த பல்லாண்டு இசை, தார்முடிமன்னர்
வந்தனை மாதவர் வாழ்த்து ஒலியோடு
முந்திய சங்கம் முழங்கின மாதோ"

என்று பொதுவாகப் பாடி நிறுத்திவிட்டார்!

## இராமன் பரசுராமன்!

இறைவனின் ஈரைந்து அவதாரங்களுள் ஈரிரு அவதாரங்கள் இயைந்தன சம கலத்தவையாய். ஆம்; இராமன் பரசுராமன், கிருஷ்ணன் — பலராமன் ஆகிய அவதார புருஷர்கள் சம காலம் உட்ளிட்டவர்களாய் இருந்தமையை நாம் அறிகின்றோம்.

ஒரே இறைவன் ஒரே சமயத்தில் ஈருருவங்கள் கொண்டு எப்படி அவதரிக்க இயலும் எனக் கேட்போரும் உண்டு. இறைவனின் எல்லையில்லாக் கூறுகள் அவதாரம் எடுக்கின்றன என்ற நம்பிக்கையில் பார்க்கும் பொழுது, இருவேறு கூறுகள் இணையாக—ஏன் அதனின் மேலாம் எண்ணிக்கையிலான கூறுகளும், தனித்தனி அவதாரத்தை, ஏக காலத்தில் ஏற்றிடல் ஏன் ஏலாது என்போமானால் 'இயையும்?' என அமைவர் அவர்கள்.

ஆனால், அவ்வாறு ஒரே சமயத்தில் இருந்த இரு வேறு அவதாரங்கள் இறைவனின் அவதார நோக்கத்தை ஏக காலத்தில் ஏந்தினவா என்று பார்ப்போமானால், 'இல்லை' யெனத்தான் தோன்றுகின்றது; அல்லவை அழித்து நல்லவை நாட்ட வந்த இராம-பரசுராம அவதாரங்களைப் பற்றி இந் நோக்கில் காண முயல்வோம்.

> "அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்
> செந்தண்மை பூண்டொழுக லான்"

என்னும் திருக்குறட்பாவின் மூலாதாரம் கொண்டு, பரசுராமன் தன் தாயையும், இருபத்தொரு தலைமுறை அரசர்

களையும் கொன்றவன். ஆதலால் அந்தணன் ஆகான். அதனாலேயே இராமன் அவனை அந்தணன் என விளிக்க விழையாது, அவனுடைய தந்தையின் பெருமை காட்டி விளிக்கின்றான் என்பாரும் உளர்.

மிதிலையில், பல்லாண்டுகளாய்ப் பார்மன்னவர் எவரும் பெயர்த்தெடுக்கவும் இயலாத நிலையதாய் இருந்த வில ஒடித்து, முதல் நாள் தன்விழி கண்ட வேல்விழியாளாம் சீதையையே இராமன் திருமணம் செய்து கொண்டான். அதனால் மகிழ்ந்த மனத்தோடு சக்கரவர்த்தி தயரதன் மிதிலை நீங்கிப் புதுமணத் தம்பதியரோடு அயோத்திக்குத் திரும்பினான். இடை வழியில், எல்லையில்லா வல்லமை பொருந்திய பரசுராமன் வருவதை கம்பர் வர்ணிப்பதைப் பார்த்தால் படிப்பவர்களுக்கே பயம் தோன்றுகின்றது: ஏன்? பாரெல்லாம் தன் பாதத்தைப் பணியும் பாங்கினனாகிய சக்கரவர்த்தி தயரதனே பயந்தான் என்றால் நாம் என்ன? பயந்த தயரதன் பணிந்து வணங்கி வேண்டிக் கொண்டும் பரசுராமன் தன் அகம்பாவம் காட்டி இராமனை வாதுக்கு இழுத்தான்!

சீதையை மணக்க இராமன் ஒடித்த வில்லும் பரசுராமன் தன் கையில் கொண்டிருந்த வில்லும் வந்த வகையை விளக்கிக் கூறினான். "மிதிலையில் இருந்த வில் ஊனம் உற்றது; அதனால் எளிதில் நீ அதனை ஒடித்து விட்டாய்! என்னிடம் உள்ள தனுசை நீ வளைக்க முடியாது; முடிந்தால் ஆச்சரியப்படுவேன்" எனச் சவால் விட்டான்! இராமனோ அவன் கொடுத்த வில்லையும் வெகு எளிமையாக வளைத்து நாண் ஏற்றி விட்டான்; ஏற்றிய நாணை எதிரில் நின்ற பரசுராமன் மேல் எய்ய மனமின்றி, இவ்வம்பிற்கு இலக்கு யாது? என்று அவனையே கேட்டான்.

"பூதலத்து அரசை எல்லாம் பொன்று வித்தனை; என்னும்
தேவவித்து ஆய மேலோன் மைந்தன் நீ; விரதம் பூண்டாய்;
ஆதலின் கொல்லல் ஆகாது; அம்பு இது பிழைப்பது அன்றால்
யாது இதற்கு இலக்கம் ஆவது? இயம்புதி விரைவின்
என்றான்"

இப்பாடலில் அந்தணர் புதல்வனாகிய பரசுராமனைக் கொலைகாரன் என்ற காரணத்தால் நேர்முகமாக அவனை 'அந்தண'! என்று அழைக்காமல் அவன் தந்தையின் பெருமையைக் காட்டி அழைத்தான் இராமன் என்பார்கள்!

தவ முனிவர்களுக்குத் தடையாக இருந்தாள் தாடகை என்பது தவிர, அவள் இராமனுக்கு எதிராளியும் அல்ல; அவனுடைய குலப் பகையும் அல்ல. அவள் எதிர்ப்பட்டவுடன் பெண் என்னும் காரணத்தால் அழிக்க அவன் அகம் கொள்ளவில்லை. ஆசான், விசுவாமித்திரர் ஆணையால் மனசாட்சிக்கு மாறாகவே அவளைக் கொன்றான்!

தன்னுடன் நேருக்கு நேர் சண்டையிடாத ஏன், எவன் ஒருவனால் போற்றிப் புகழப்பட்டு, தன் தம்பியும் தானும் போர் புரி வேளையில் இராமன் இடை புகமாட்டான் என்று தன் மனைவியின் பால் இயம்பப்பட்டானோ, அந்த வாலியைக் கொன்றவனும் அதே இராமன் அல்லவா! சுற்றச் சூழலும், தோற்றுவித்துக் கொண்ட தோழமையும் அதன் காரணம் ஆகும்!

ஒன்றிற்கும் மேலாம் கொலைகள் புரிந்தான் பரசுராமன் என்பது மறுக்க முடியாதது! ஆனால், அவன் முதற் கொலை செய்தது தானாகவா? 'தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை' என்ற காரணத்தால், தன் தாயே யானாலும் கற்பினுக்கு இழுக்கு உண்டாக்கிக் கொண்டு விட்ட அவளைக் கொன்றான், தன் தந்தையின் சொற்படி! பின்னர் செய்த பல கொலைகளும் வெறும் கொலைகள் என்ற நேர்ப் பொருளில் கொள்

வதற்கு இல்லை; தன் தந்தையைக் கொன்ற குலத்தைத் தான் சூளுரைத்த வண்ணம் நாசம் செய்த போர் முறைக் கொலைகளே.

ஒரு முனிவர்—கௌதமர்—தன் மனைவி அகலிகையை—வேற்றொருவனின் அரவணைப்பு எனத் தெரிந்த பின்னும் மாறு வேடம் பூண்டிருந்த இந்திரனின் சுகம் கொண்டவளை—தன் வாயாலேயே சபித்தார், கல்லாகும்படி. தன் பிழையுணர்ந்து சாப விமோசனம் வேண்டிட, அதற்கும் வரம் அளித்தார், இராமனின் திருவடிப் பொடி பட்டு முன்னைய உருவம் பெறுவாள் என! ஆனால், பரசுராமனின் தந்தையாகிய சமதக்னியாம் முனிவரோ தன் மனைவி தன் மனத்தில் சிறுபிழை பெற்றாள், கற்பினுக்குக் களங்கம் வரும்படி என்ற மாத்திரத்திலேயே, தானே அவளை நேரடியாகத் தண்டிக்காமல் தன் மகனைக் கொண்டு மடிவித்தார் என்னும் போழ்து, அவரே கொலைத் தண்டனைக் காரணகர்த்தாவாகின்றார்! அப்படியானால் அவரை மட்டும் பெருமை பெற்றவராகக் கொள்ளுதலும், அவரின் ஆணையின் அடிப்படையில் அவர் மகனான பரசுராமனை நலம் அற்றவனாகக் கருதுதலும் எப்படி ஏற்கும்?

எனவே, கொலை புரிந்தவன் பரசுராமன் என்ற நோக்கில் 'அந்தணன்' எனப்படுவதற்கு இல்லையென்றால், வான்மீகியின் படி சாதாரண மனிதனாகவும், கம்பரின் நோக்குப்படி அவதார புருஷனாகவும் நிற்க அந்த ராமனும் 'அந்தணன்' என ஏற்கப்படும் தன்மையன் அலன் ஆகின்றான்! இதுவோ எவரும் ஒப்ப இயலாத கருத்து!

ஆக, இராமன், பரசுராமன் இருவருமே ஒரு தன்மையர் ஆகின்றனர். சுற்றச் சூழல் காரணமாகவும், தந்தை குரு ஆகியவர்களின் ஆணைகளை நிறைவேற்றும் காரணமாகவும் அவர்கள் வதம் புரிந்தும் குற்றமில்லாதவர்கள் ஆகின்றனர்!

அப்படியானல் இராமன் பரசுராமனை நோக்கி, 'வேத-வித்தாய மேலோன் மைந்தன் நீ' என்றது என்ன? தன் தாரமே யானுலும் தகாத தர்மத்தள் ஆகிவிட்டால் அவளைத் தண்டித்தல் வேண்டு மென்பது வேத வழி; அவ்வேத முறைக்கு ஆகும் வித்துக்களுள்—சீரிய சிறந்தோருள்—ஒரு வித்து நின் தந்தை; எனவே தந்தை சொற்கடவாது நின்றனை நீ! என இராமன் அந்நிகழ்ச்சியைச் சுட்டிக் காட்டினுன்! அவ்வாறு சுட்டு முகத்தான் இராமன் ஒரு இரகசியத்தைக் குறிப்பிட்டான்!

"யானும் நின் வழியைப் பின்பற்றி, தந்தை சொல் கடவாதவனுய் நிற்பேன். (தரணியாட்சி தம்பிக்குத் தந்து விட்டுக் கானகம் ஏகும் வினையைப் பின்னுளில் ஏற்கப் போகின்றேன்!) என்ற தன் அவதார நோக்கின் ஆரம்ப கட்டத்தைச் சொல்லாமல் சொல்வதற்கான விளிப்பே அது!

பின்னரும், 'விரதம் பூண்டாய்; ஆதலின் கொல்லல் ஆகாது' என்பது என்னவோ? "முன்னம் மொழிந்தேன், பூதலத்து அரசு எல்லாம் பொன்று வித்தனை யென்று, அதனுல் நீ கொல்லப்பட வேண்டியவன். ஆனுல், நீ உன் தந்தையைத் தொலைத்த வம்சத்தை நாசம் செய்வதாகச் சூளுரைத்து, அதனை நிறைவேற்றும் விரதம்—சபதம் பூண்டாய்; எனவே உன்னைச் சாதாரண கொலையாளியின் நிலையில் வைத்துக் கொல்லுதல் ஆகாது" எனும் குறிப்புக் காட்டினுன் இராமன். ஈண்டும் ஒரு இரகசியத்தைக் கூருமல் கூறினுன்.

"நான், பின்னுளில், சுக்ரீவனேடு நட்புக் கொண்டு, 'வானிடை மண்ணில் நின்னைச் செற்றவர் என்னைச் செற்ருர்' என்னும் வாக்குக் கொடுத்து, அவ்வாக்கினைக் காக்கும் விரதத்தால் எனக்கு நேர்ப்பகையல்லாத வாலியை வதை செய்யப் போகின்றேன்' என்று சொல்லாமல் சொல்லிய இரகசியமே அந்தத் தொடர்!

—இராமன் இயற்றப் போகும் இந்த இரண்டு இணையான செய்கைகளையும் குறிப்பால் கூறியதை அவதார புருஷன் பரசுராமனும் தன் தவ வலிமையால் புரிந்து கொண்டான்! "யான் அந்தணன்" என அந்தப் பாடலிலேயே கம்பர் பாடுவது இதனாலேயே. இது மட்டுமல்ல; அவதாரனாகிய உனக்கு ஒருநீதி, எனக்கு ஒரு நீதி' என்ற பாங்கில் அல்லாமல், நினக்கு ஆகப் போகும் நியாயத்தையே எனக்கும் ஆக்கி, "அம்பிற்கு இலக்கம் ஆவது யாது?" என என்னையே கேட்டு நிற்கின்றாய்' என்பதைத் தெளிவுறுத்துவான் போலே, "நீதியாய்" என இராமனை விளிக்கின்றான்!

"நீதியாய்! முனிந்திடேல்; நீ இங்கு யாவர்க்கும்
ஆதி; யான் அறிந்தனன்; அலங்கல் நேமியாய்!
தேதியா இறுவதே யன்றி தெண் மதிப் பாதியான்
பிடித்தவில் பற்றப் போதுமோ?"

இவ்வாறு, இராமனும் தன் பின் வந்துள்ள அவதாரன் என அறிந்ததும், இருவேறு அவதாரங்கள் இணையாகத் தம்தம் அவதார நோக்கங்களை மேற்கொளல் வேண்டாம் என்ற பாங்கில்தான், முழு அமைதிபெற்று மறைய வேண்டித் தன் தவவலிமை முழுவதையும் இராமனிடமே அர்ப்பணித்து விட்டுச் சென்றான் பரசுராமன்!

○

# ஆசிரியரைப் பற்றி

பி. சி. சீதாபதி—'குறளடிமை' சேலம் மாவட்டம் சங்ககிரி துர்கத்தில் (25-4-1926) பிறந்தவர். தந்தையார், காலம் சென்ற கிருஷ்ணசாமி நாயுடு அவர்களும், தாயார் திருமதி. அங்கம்மா அவர்களும் பள்ளி ஆசிரியர்கள்

இவர் சேலம் சந்திப்பில் தென்பிராந்திய இரயில்வேயின் நிர்மாணப் பிரிவின் பொறி இயல் வல்லுனர் அலுவலக மேற்பார்வையாளராக (Office Supdt, Executive Engineers Office, S. Rly., Construction, Salem Jn.) பணியாற்றி வருகின்றார்.

கடந்த சுமார் பதினைந்து ஆண்டுகளாகக் காரைக்குடி கம்பன் விழா உட்படப் பல்வேறு தமிழ் விழாக்களில் பங்கேற்று வருகின்றார் இவருடைய ஆய்வுக் கட்டுரைகள் அவ்வப் போழ்து பல்வேறு விழா மலர்களில் இடம் பெற்றுள்ளன.

இவருடைய திருக்குறள் தொண்டினைப் பாராட்டி ஆனந்தவிகடனில் சுமார் பத்து ஆண்டுகளின் முன் 'சைக்களில் திருக்குறள்' என்ற தலைப்பில் அறிமுகப்படுத்தப் பட்டுள்ளார்.

பிற காண்டங்களையும் இதே நோக்கில் அலசிப் பார்த்துச் சுவை கண்டு விண்டிடும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டுள்ளார்.

—கவிஞர் மா. வரதராஜன்

---

wrapper printed by prabhu printing house. madras-17